# ந

**நகுலன்** — பாண்டவர்களி லொருவன். மாத்திராதேவியிடம் அசுவினிதேவராற் பிறந்தவன். இவன் புத்திரர் திரௌபதியிடம் சதாநீகனும், சேதுராஜகுமாரி ரேணுமதியிடம் நிரமித்திரனுமாவர்.

**நகுலேசுவரபீடம்**— சததிபீடங்கள் அறுபத்துநான்கனுளொன்று. இது நாகுலத்தி லுள்ளது.

**நகுஷன்**—சந்திரவமிசசதாசன். ஆயுவின் மகன். இவன தாய் சுவாபாநவி. இவன் பாட்டன் புரூரவன். மனைவி பிரியமவதை. மைந்தர் யதி யயாதி சம்யாதி ஆயாதி உத்தமனுகிய ஐவர். பிரமஹத்தியால் இந்திரன் கடலிற்புக் கொளிததிருந்த பொழுது அசுய மேதவகள் முடித்திருந்த இந்நகுஷனை தேவர்கள் இந்திரனுக்க, இவன் காமாதுரனுய் இந்திராணி போகநதைசயவாவிச் சததருஷிகள் பல்லக்கெடுப்ப அவள்பாலடைவோன்விரைந்துசெல்க வெனப் பொருள்பட "சர்ப்ப சர்ப்ப" என, அமமுனிவருள் மூற்கொம்பு தாங்கி முனைடந்த அகத்தியமுனிவர் சினந்து "சர்ப்ப மாகுக" என, உடனே சர்ப்பமாய்ச் சஞ்சரித்து நின்று பாண்டவரைவிழுங்குகையில் வீமனுல் வயிறுகிழிக்கப்பட்டுத் தருமருபதேசத்தாற் சாபநீங்கியவன்.

**நகோற்பேதம்**—ஒருதீர்த்தம்.

**நக்கசாரணர்**—நாகரிகர். ஒருசாதியர்.

**நக்கீரனர்**—கடைச்சங்கப் புலவரில் தலைமை பெற்றவர். தெய்வப்புலவர். மதுரைக்கணக்காயனுர்மகனார். "கொங்குதேர் வாழ்க்கை" எனுமமுதலை யுடைய சோமசுந்தரேசர் திருக்கவிக்குங் குற்றங்கூறிய திடசித்தர் இவர்கல்விவல்லபமும் தமிழுக்கு அக்காலத்திருந்த ஆற்றலும் இவரியற்றிய இறையனுரகப்பொருளுரையானே நன்கு விளங்கும். பெருமானே புலவராகப் போந்து நெற்றிக்கண்ணைக் காட்டிய பொழுது 'உடன்முழுதுங் கண்காட்டினுங் குற்றங் குற்றமே' யெனக் கூறி, அகத்தியனுரால் இலக்கணமுபதேசிக்கப் பெற்றவர். தமக்குற்ற குட்டநோயை, கைலைபாதி காளத்திபாதி யெனும் பிரபந்தம் பாடிப் போக்கியவர். சிவபூசையில் தவறினுர் தொண்ணூற் றொன்பதின்மரை ஒருமலைக்குகையிலடைத்து அத்தகை யொருவரைததேடியுழனற ஒரு பூதம், இவர் தடாகத்தருகே சிவபூசை செய்திருபபது பார்தது நீரிற் பாதியும் நிலத்திற் பாதியுமாக இவர் முன்னுதிர்ந்த ஆலிலை யொன்றை நீரிலுற்றபாகம் மீனாகவும் நிலததிலுற்றபாகம் பறவையாகவு மூநக்கொண் டீர்க்கச் செய்து அதனுல் இவர்மனம் வேறுபட இவரையுங் கொண்டு போய் அக்குகையிற் சேர்த்து நீராடியுண்ணச்செல்ல, இவர் அது தறியில் திருமுருகாற்றுப்படை பாடி முருகக்கடவுள் திருவருளால் தம்மையும் மற்றையோரையுங் காத்தவர். இது திருப்பரங்குன்றத்தில் நிகழ்ந்தது. சீகாளத்தியில் நிகழ்ந்ததாக அப்புராணங் கூறும். இறையனுர் அகப்பொருளுக்கு உரையும் ; கைலைபாதி காளத்திபாதி, திருவீங்

கோயில்நான்மணிமாலை, திருக்கழுமலமும்மணிக்கோவை, திருவெழுகூற்றிருக்கை, கோபப்பிரசாதம், காரெட்டு, போற்றிக்கலிவெண்பா, திருக்கண்ணப்பதேவர் திருமறம், நெடுநல்வாடை முதலியனவுமியற்றியவர். இவர்வழிபடுகடவுள் சீகாளத்திஞானப் பூங்கோதையம்மையாரெனத் திருவிளையாடற் புராணங்கூறும். இவரால் இலக்கிகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறன் முதலியோர் பாடப்பெற்றனர்.

நக்ஷத்திரகன்—விசுவாமித்திர முனிவன் சீடரிலொருவன். இவனே அரிச்சந்திரனைத் தொடர்ந்து விசுவாமித்திரனுக்குக் கொடுப்பதாக ஒப்புக்கொண்ட தொகையை நிர்ப்பந்தித்து வாங்கித் தரக் கேட்டவன்.

நச்சினார்க்கினியர்—மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியரெனப்படுவர். இவர் மதுரைநகரிலே பாரத்துவாச கோத்திரத் துதித்த வேதியர். சிறந்த உரையாசிரியர். ஒப்புயர்வில்லாக் கல்வி வல்லவர். தொல்காப்பியக் கடலை இவருரை தெப்பமே தாண்டச் செய்யும் வல்லபமுடையது. "பாரதசொல் காப்பியமும் பத்துப்பாட் டுங்கலியும், ஆரக் குறுந்தொகையு ளைஞ்நான்கும்—சாரத் திருத்தகு மாமுனிசெய் சிந்தா மணியும், விருத்திநச்சி னார்க்கினிய மே"—என்றான்றோர் செய்யுள் இவர் செய்த உரைகளைக் குறிக்கும். இவருரை செய்திலரேல் இந்நூல்கள் இருந்தவிடமுந்தெரியாது பலவருடங்கட்கு முன்னரே யிறந்தொழிந்திருக்கும். இவர் முத்தமிழ் வல்லவரென இவருரை புலப்படுத்தும். இவர் காலமும் பரிமேலழகர் காலமுமொன்று. கச்சியப்ப சிவாசாரியர் கம்பர் இவர் காலத்திற்குப் பிற்பட்டவர்கள். இவர் இளம்பூரணருடைய மாணவர். பேராசிரியர் சேனாவரையர் ஆளவந்த பிள்ளை முதலினோர் இவராற் கூறப்பட்டிருத்தலின் அவர்கள் இவர்க்கு முற்காலத்தவரெனத்தெரியவருகிறது.

நச்சுமனார்—திருவள்ளுவமாலை சொல்லிய கடைச்சங்கப் புலவரிலொருவர்.

நஞ்சுவிழியரவு—கண்ணில் விடமுடைய பாம்பு. [மணி] அழற்கணாகம். திருஷ்டிவிஷம் எனவும் பெயாபெறும். இதனாற் பார்க்கப்பட்டோரிறப்பர். இவ்வகையி லிறந்தவனே இராகுலன்.

நடாதூராழ்வான்—வைஷ்ணவ சிங்காசனாதிபதிகள் எழுபத்து நால்வரிலொருவர்.

நடுவிலாழ்வான் — வைஷ்ணவ சிங்காசனாதிபதிகள் எழுபத்து நால்வரிலொருவர்

நட்டுவலை—சக்ஷுர்மநுவின் மனைவி. இவள் மகன் ஊருமகன்.

நத்தத்தனார்—நல்லூர் நத்தத்தனாரெனவும்படுவர். பத்துப்பாட்டிலொன்றாய சிறுபாணாற்றுப்படையாசிரியர். திருவள்ளுவமாலை பாடிய கடைச்சங்கப் புலவரிலொருவர்.

நந்தகோபன்—கிருஷ்ணனை வளர்த்த தந்தை. இவன் மனைவி யசோதை.

நந்தட்டன்—கந்துக்கடன் புத்திரன். இவனைச் சீவகன்தம்பி யென்பர்.

நந்தர்—நந்தனிற்காண்க.

நந்தனம்-இந்திரன் உத்தியானவனம்.

நந்தனார்—திருநாளைப்போவார் நாயனாரிற் காண்க.

நந்தன்—(1) நந்தகோபன். (2) வசுதேவனுக்கு மதிரையிடம் பிறந்தவன். (3) மகதநாட்டில் ரிபுஞ்சயனுக்குப் பின் அரசு செய்தவன். இவன் மந்திரி சுநகன் மகன் பிரதியோதனன். இவன் பரம்பரையில் வந்த நந்திவர்த்தனுக்கும் நந்தனென்று பெயர். இவன் எட்டாஞ் சந்ததியாக வந்தவனும நந்திவர்த்தன். அவன் மகன் மகாநந்தி ஒரு சூத்திரப் பெண்ணைக் கூடி நந்தனென்பவனைப் பெற்றான. இந் நந்தனுக்கு மகா பதுமனென்றும் பெயர். இவன் க்ஷத்திரியர்களை வேரறுத்து ஆரியநாடு முழுமைக்கும் பேரரசனா யிருந்தான. இவன் வழிவந்த ஒனபதின்மர் நவநந்தனரெனப்படுவர். இந் நவநந்தனர் விஷ்ணுகுப்த னெனும வேதியனாற் கொல்லப்பட்டனர். ரிபுஞ்சயனுக்குப் பின் அரசுசெய்தவர்கட்கெல்லாம் நந்தரெனும் பெயர் பொதுவாக வழங்கும். (4) நந்தனார் (5) புத்ததேவன் ஞாதி. அவனுக்குத் தர்மோபதேசஞ் செய்து தவப்படுத்திப் பிடகத்திரய மோதுவிப்ப, அவன் நித்திரா சமயத்தில் தன் மனைவியாகிய வரசுந்தரியைத்தழுவிவருந்தியழ, அவ்வேட்கை விலக அரம்பா ஸ்திரீகளைக் காட்டி வரசுந்தரியை உபேக்ஷை செய்வித்தமையின் அரமகளிரைக்கண்டுமையல்மிக்குத் தவத்தை விடுத்துச் சென்றவன். [மணி]

நந்திகேசுரம்— திருநந்தி தேவராற் பூசிக்கப்பெற்ற சிவ ஸ்தலம், நருமதைக்கரையி லுள்ளது. இங்கே ருஷிகை யென்னும் பாலவைதவ்யப் பார்ப்பனப்பெண் பார்த்திவலிங்கபூஜை செய்கையில், மூடனென்னும அசுரன் அவளைத்துன்புறுத்திச் சிவபூஜையைத் தடுக்க, அவள் வேண்டுகோளால் சிவபிரான் மூடனைச் சங்கரித்த க்ஷேத்திரம். [சைவபு]

நந்திக்கிராமம் — அயோத்திக் கருகி லுள்ளதொருசிறுகிராமம். இதிலே தானே பரதன், வனவாசஞ்சென்ற இராமன் வருமெல்லையும் வசித்திருந்தனன்.

நந்திதுர்க்கம் — மைசூர்ச் சீமையில் ஒரு மலை. பாலாறு உத்தரபினாகினியெனு நதிகளின் உற்பத்திஸ்தானம். [ண்க.

நந்திதேவர்—திருநந்தி தேவரிற் கா

நந்தியாவர்த்தமாலையன்—துரியோதனனுக்கு நாமாந்தரம்.

நந்திவர்த்தனன—(1) க்ஷத்திரியவமிசத்து ரிபுஞ்சயனைகொன்ற தன் மகனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்த சுநகனென்னும் மந்திரி வமிசத்து ஆறாம் சந்ததியான அரசன். (2) ஓரரசன். உதயணன் மகன். மகா நந்தியின்பிதா.

நந்தினி—வசிஷ்டர் வளர்த்த காமதேனுவின் கன்று.

நந்தை—(1) நாகராசனுன சாலபோதன் மகள். தந்தையின் கோபத்தால் ஊமையாகச் சபிக்கப்பட்டு, சுசர்மனால் அதை நீங்கியவள். (2) ஒரு தெய்வப்பசு.

நபகன்—வைவசுவத மநுபுத்திரன். நாபாகன் பிதா

நபஸ்வதி — அக்நர்த்தானன் இரண்டாம் மனைவி. அவிர்த்தானனை ஈன்றவள்.

நபஸ்வந்தன்—முராசுரன்மகன். கண்ணனாற் கொல்லப்பட்டவன்.

நபன்—விப்பிரசித்தி மகன்.

நபுலவிபுலர்—சீவகன் தம்பியர். காமக்கிழத்தியர் பால் சச்சந்தனுக்கு இத்தோர்.

நப்பாலத்தனார் — திருவள்ளுவமாலை பாடிய கடைச்சங்கப் புலவரி லொருவர்.

நப்பூதனார்— காவிரிப்பூம் பட்டினத்துப் பொன்வாணிகனார் மகனார்; இவர் பத்துப்பாட்டில் முல்லைப் பாட்டின் ஆசிரியர்

நமி—(1) பூதபுராணத்திற் கூறப்படும் ஒரிராசகுமாரன் [மணி] (2) கச்சன புதல்வன் [சூளா] (3) ஜைனமதஸ்தாபகரான இருபத்து நான்கு தீர்த்தங்கரரில் இருபத்தொன்றுவதாக அவதரித்தவர்.

நமிநந்தியடிகள்நாயனார்—சிவபக்தர்களாகிய அறுபானமும்மை நாயன்மாரிலொருவர். சோழநாட்டுள்ள ஏமப்பேறூரில் அந்தணர் குலத்துதித்தவர். திருவாரூருக்கு நாடோறுஞ் சென்று சிவதரிசனஞ் செய்துவருகையில், ஒருநாள் ஆலயத்தில் தீபங் குறைவா யிருப்ப, அதற்கு நெய் வேண்டு மென்று அருகிலுள்ள ஒருவீட்டிற் சென்று கேட்ப, அவர்கள் சைனராதலின், உங்கள் சுவாமி கையில் தீயிருக்கையில் வேறு தீபம் யாதுக்கு? வேண்டாமே. குளத்துநீரால் விளக்கெரியுமாயின் உங்கள் சமயம் உண்மைச்சமயமென நம்பலாமெனக்கூற, நாயனார்வருந்தி, சிவபெருமானைத் தரிசித்து விண்ணப்பித்துத் திருக்குளத்துநீரால் விளக்கெரிவித்து அங்ஙனமே நாடோறுஞ்செய்துவந்தவர். திருவாரூரில் பிறந்தார்கள் யாவருஞ் சிவகணங்களாக விளக்கத் தரிசித்த புண்ணியசீலர். நெடுநாள் திருவாரூரிலே தீபத் திருத்தொண்டினைச்செய்துகொண் டிருந்து சிவபதமெய்தியவர்.

நமுசி—விப்பிரசித்தி மகன். இவன் மனைவி சுவர்ப்பானுவின் மகளாகிய பிரபையென்பாள். இவன் இந்திரனாற் கொல்லப்பட்டவன்.

நம்பாடுவார் — விஷ்ணு பக்தர்களி லொருவர்.

நம்பிநெடுஞ்செழியன் — அரசர்க்குரிய இன்பங்களையு மநுபவித்த எல்லா நன்மைகளு முடையவன். பேரெயின் முறுவலார் என்னும் புலவராற் பாடப்பெற்றவன்.

நம்பியாண்டார்நம்பி—திருநாரையூரி லெழுந்தருளி யிருக்கும் பொல்லாப்பிள்ளையாருக்கு அர்ச்சனைபுரிந்துவந்த ஆதிசைவ வேதியர்க்குப் புத்திரர். ஒருநாள் இவர்பிதா அயலூர்க்குச் செல்பவர் இவரை விளித்து வழக்கப்படி யான் செய்து வரும் பூஜையைச் செய்து வருகவெனக் கட்டளையிட்டுச் செல்ல, இவர் தந்தைசொன்மேற்கொண்டு ஆலயத்தை யடைந்து அபிஷேகஅலங்காரதிகளைச் செய்து முடித்து நிவேதனத்தைத் திருமுன் வைத்து, எம்பெருமான் அமுது செய்ய வேண்டுமென்று பணியவும், விநாயகர் அமுது கொள்ளா

மைகண்டு, அடியேன்செய்தபூஜையில், தவறுகணேர்ந்தனவோ அறிகிலேன். யான் நிவேதித்த அமுதினை உட்கொள்ளாமைக்குக் காரணமென்ன? என வருந்தித் தம் தலையினைக் கல்லில் மோதிக்கொள்ளச் செல்லுகையில், கருணாமூர்த்தியாகிய கணேசப் பெருமான் 'நம்பி! பொறு' என்று தடுத்து அவ்வமுத முழுவதையும் புசித்தருளக் களிகூர்ந்து, எந்தையே! இன்று காலந் தாழ்த்தது. இனி அடியேன் பள்ளிக்குச் சென்றால் ஆசிரியர் தண்டிப்பர். ஆனதால், வேதபாட முதலியவற்றைத் தேவரீரே போதித்தருள வேண்டும் எனக்கூற, விநாயகர் அங்ஙனமே கூற, ஓதி மகிழ்ந்து வீடுசென்று, அன்றுமுதல் அப்படியே நாடோறுஞ் செய்து வந்தவர். இவர் பொல்லாப் பிள்ளையாருக்குப் பேரன்பர். திருத்தொண்டத்தொகையின் பொருளை விநாயகர் கூற, கலித்துறைத் திருவந்தாதி யோதித் துதித்தவர்.

இவ்விடயங்களைக் கேள்வியுற்றவனும், திருவாரூரில் அரசு செலுத்தியவனுமாகிய அபயகுலசேகரனெனுஞ் சோழன் தன்பால்வருஞ் சிவனடியார்கள், மூவர் முதலிகளோதிய தேவாரத் திருமுறைகளிற் சிற்சில பாசுரங்களைச் சொல்லக்கேட்டு, அவற்றை யடைவே பெறவேண்டுமென்று கருதி, இவர்பாலடைந்து தன் கருத்தை வெளியிட்டு, பொல்லாப் பிள்ளையாருக்குச் சிறந்ததொரு மாபூசைசெய்து வாழை பலா மா முதலிய பழங்களும் பல உணவுகளும் சிற்றுண்டிகளும் எல்லையில்லாதனவாகச் செலுத்த அவற்றையெல்லாம் நம்பி திருக்கரத்தால் வாங்கிக்கொடுத்து வர, புகுந்தவிட மறியாது பொல்லாப்பிள்ளையார் திருவமுது செய்தபின், பிள்ளையாரிடம் வினவியுணர்ந்து, அரசனே! சிதம்பராலயத்தில் மேற்பக்கலில் மூவர் கையிலச்சினையிட்ட ஓரறையில் சேமிக்கப்பட்டுளவென உணர்த்தினர். இவரியற்றிய திருநாரையூர் விநாயகப் பிள்ளையார் திருவிரட்டைமணிமாலை, கோயிற்றிருப்பண்ணியர் விருத்தம், திருத்தொண்டர் திருவந்தாதி, திருஞான சம்பந்தர் திருவந்தாதி, திருச்சண்பை விருத்தம், திருஞானசம்பந்தர் திருமும்மணிக்கோவை, திருஞான சம்பந்தர் திருவுலா, திருஞானசம்பந்தர் திருக்கலம்பகம், திருஞானசம்பந்தர் திருத்தொகை, திருநாவுக்கரசுசுவாமிகள் திருஏகாதசமாலை யெனும் பிரபந்தங்கள் பதினோராந் திருமுறையில் விளங்குகின்றன.

நம்பியாரூரர்—சைவ சமயாசாரியரிலொருவராகிய சுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு நாமாந்தரம்.

நம்மாழ்வார்—வைணவ மதோத்தாரணர்களாகிய ஆழ்வார்கள்பன்னிருவரில் ஐந்தாவதாக அவதரித்தவர். இவர் பகுதாந்யவருஷத்தில் வைகாசிமாசத்தில் வெள்ளிக்கிழமையில் விசாக நக்ஷத்ரத்தில் தாம்பரபர்ணி தீரத்தில் குருகாபுரத்துதித்தவர். கௌஸ்துபாம்சம். ஸேநாம்சம். பகவதம்சம். இவர்செய்த ப்ரபந்தம்:—திருவிருத்தம் [illegible]

ஆசிரியம் ஏழு. அந்தாதி எண்பத்
தேழு. அவைவிலந்தாதி யென்கிற
திருவாய்மொழி ஆயிரத்தொரு
நூற்றிரண்டு. இவருக்குத் தகப்ப
னார் பூவைச்யரானகாரி யெனகிற
வர். தாயார் நங்கையார். இவருக்
கிருப்பிடமானபுளிமரமானது சே
ஷாம்சம். இவர் 16 - ம் வயதில்
சேனைமுதலியாரால் உபதேசிக்கப்
பெற்றவர். இவர் சிஷ்ர் மதுரகவி
யாழ்வார். நம்மாழ்வார் 36 - திரு
நக்ஷத்திரங் கண்டவர். இவர் திரு
நாமம்.-சடகோபன், பராங்குசன்,
வகுளாபரணன்,மாறன் முதலியன.

நாதமுனிகள் வீரநாராயணபுர
த்திற்குவந்து மன்னனாரை ஸேவி
த்து அவர் நியமனத்தினாலே அங
கேதிருநந்தநவனம் முதலான கை
ங்கர்யங்களை நடததிக் கொண்டு
சாஸ்த்ர ப்ரவர்த்தநமுஞ் செய்து
கொண் டிருக்கச்செய்தே மேல்
நாட்டினின்றும் சில ஸ்ரீவைஷ்ண
வர்க ளெழுந்தருளி மன்னனாரை
ஸேவித்து அவர் முன்னே ஆராவ
முதெனகிற திருவாய்மொழியை
விண்ணப்பஞ்செய்ய, நாதமுனிகள்
அதைக் கேட்டருளி ஆநந்தித்து
ஆயிரத்துளிப்பத்து என்றிருக்கிற
தே இப்பிரபந்தம் உங்களுக்குமுடி
யவந்திருக்குமோ வென்று கேட்க,
இப்பத்துப் பாட்டுமே வருமெ
ன்று அவர்கள் சொல்ல, நாதமுனிக
ளும் அவர்களை ஆதரித்துப் போக
விட்டருளி, சடகோப னவதரித்த
திருக்குருகூர்ப்ரதேசத்திலே இது
இருக்கவேணுமென்று அந்தேசத்
தில் எழுந்தருளி ஆழ்வாரை ஸே
வித்து மதுரகவிகளுடைய சிஷ்ய
ரான பராங்குசதாஸரைக் கண்டு
சேவித்து இவ்விடத்திலே திரு
வாய்மொழி நடையாடுகிறதோவெ
ன்றுகேட்க, திருவாய் மொழியும்
மற்றுந் திவ்யப்ரபந்தங்களும் நெ
டுங்காலமுண்டுகிலமாய்த்து; ஆனா
லுமெங்களாசார்யர் மதுரகவிகள்
அடியேனுக்குக் கண்ணிநுண் சிறு
த்தாம் பென்கிற திவ்ய ப்ரபந்தத்
தை ஸாதித்து இத்தை யாழ்வார்
திருமுன்பே பன்னீராயிர முருச்
சொல்ல ஆழ்வார் ப்ரஸன்னராவா
ரென்று எங்களாசார்ய ரருளிச்செ
ய்தாரென்று சொல்ல, நாதமுனிக
ளுங்கண்ணிநுண் சிறுத்தாம்பைப்
பராங்குசதாஸரிடத்திலே பெற்று
ஆழ்வார் திருமுன்பே பன்னீராயிர
முரு நியமத்தோடே யநுஸந்தா
நம் பண்ணினார். பின்பு ஆழ்வாரும்
பெரிய பிராட்டியார் நியமனத்தா
லே மிகவும் ப்ரஸந்நராய் நாதமுனி
களைக் குறித்து அசரீரிவாணி சொ
ல்லுமாப்போலே திருவாய் மலர்
ந்து உமக்கென்ன வேண்டுமெ
ன்று கேட்டருள, நாதமுனிகளும்
திருவாய்மொழி முதலான திவ்ய
ப்ரபந்தங்களை யடியேனுக்குத் தந்
தருளவேண்டுமென்ன, ஆழ்வாரும்
ப்ரீதியுடனே திவ்யஞானக் கண்
ணைக் கொடுத்தருளி ரஹஸ்யங்க
ளையுந் திருவாய்மொழி முதலான
மற்றுமுள்ள நாலாயிர ப்ரபந்தங்க
ளையும் அதின் தாத்பர்யங்களையும்
யோகரஹஸ்யத்தையு முபதேசித்
தருளினார். நாதமுனிகள் ஆழ்வார்
கட்டளைப்படி வீர நாராயணபுர
மடைந்து அதனை இயலுமிசையு
மாக்கி உலகிற்பரவச்செய்தனர்.

நரகங்கள்—பாவஞ்செய்தோர் அதன் பலனை நுகரும் துக்ககரமானலோகங்கள். அவை தமம், அந்ததமம், ரௌரவம், மகாரௌரவம், கும்பீபாகம், காலசூத்திரம், அசிபத்திரவனம், கிருமிபக்ஷணம், அந்தகூபம், சந்தம்சம், சன்மலி, சூர்மி, வைதரணி, பிராணரோதம், வைசசம், லாலாபக்ஷணம், வீசி, சாரபக்ஷணம், வச்சிரகண்டம், காரம், பிசித பக்ஷணம், சூலப்ராந்தம், விதோதகம், தந்தசூகம், பரியாவர்த்தம், கிரோதானம், சூசிமுகம், பீடநம் என இருபத்தெட்டு வகைப்படுமென்பர்.

நரகவட்டம — கும்பிபாகம் கூடசாலம் ஜந்துஸ்தாநம் அழற்பிரபை இரத்தப்ரபை தூமப்ரபை வாலுகப்ரபை என எழுவகைப்படுமே.

நரகன் } (1) ஓரசுரன். திருமா
நரகாசுரன் } லுக்கு வராகாவதாரத்திலே பூமியினிடம் பிறந்த புத்திரன். இவன் தமயன் முராசுரன். இவன் காமரூபதேசத்துப் பிராக்ஜோதிஷ நகரத்தை இராசதானியாகவும் சுப்பிரதீபமெனும்யானையை வாகனமாகவுங்கொண்டவன். தன் வல்லமையால் அதிதியின கர்ணகுண்டலங்களையும், வருணன் சத்திரத்தையும் இந்திரன் சிங்காசனத்தையுங் கவர்ந்தவன். திருமால் பலதேவர்கள் வேண்டுகோளுக்கிரங்கி இநகரனையும் இவன் தமையன் முராசுரனையுஞ் சங்கரித்துப் பலர்க்குமுற்ற துயரினைக் களைந்து நராரி முராரியெனு நாமங்களை யெய்தினர். (2) விப்பிரசித்தி புத்திரன்.

நரசிங்கமுனையரையர் — அறுபான்மும்மை நாயன்மார்களிலொருவர். திருமுனைப்பாடி நாட்டு மன்னர். சிவ சின்னங்களையும் சிவனடியர்கட்குத் திருவமுதுசெய்வித்தலையுமே பெரும்பாக்கியமாகக் கொண்டவர். சுந்தரமூர்த்தி சுவாமிகள் குழந்தைப் பருவத்தில் வீதியில் விளையாடக்கண்டு மகன்மைகொண்டு தாய்தந்தையர் அநுமதிபெற்று உடனகொண்டு சென்று பிராமணசாரம் குன்றாது வளர்த்த புண்ணியர்.

நரசிங்காவதாரம் } திருமால் கொண்
நரஹரி } ட தசாவதாரங்களிலொன்று. நரவடிவுஞ் சிங்கவடிவுமாக விளங்கினமையின் இப்பெயர் பெற்றது. இதில், தானே கடவுளெனத் தருக்கியிருந்த இரணியகசிபனைத தூணத்தினின்றுதோன்றிச் சங்கரித்து, அவன் மகன் பிரகலாதனை யநுக்கிரகம் புரிந்தனர்.

நரசிம்ஹாரி — நரசிங்க மூர்த்தியின் வீறடக்கிச் சங்கரித்த சிவமூர்த்தி. இவ் வரலாற்றினைச் சரபமூர்த்தியிற் காண்க.

நரதேவன்—தடமித்தன். [சீவக]

நரநாராயணர்—(1) நரன் நாராயணனெனும் இருமுனிவர். இவர்கள் திருமாலின் அம்சமாகத்தோன்றி வதரீவனத்தில் அநேக வருஷங்கள் கடுந்தவம்புரிகையில், இந்திரன் இவர்கள் தவத்தை யழித்துவருகவென்று அப்சரசுகளை விடுப்ப, இவர்களில் நாராயணன் தன் தொடையினின்றும் அதிசௌந்தரியமுள்ள ஒரு கன்னிகையைப் படைத்து விடுத்து, அப்சரசுகள்

காணிச் செல்லுமாறு செய்தனன். (2) நரன் = அர்ச்சுனன்; நாராயணன்=கண்ணன். இவ் விருவருக்கும் இப்பெயர் மிகவு வழங்குகின்றது.

நரபதிதேவன்—கேமமாபுரத் தரசன் [சீவக]

நரபாலன்—வைவசுவத மநுபௌத்திரன். திருஷ்டன் புத்திரன்.

நரன்—(1) நர நாராயணரில் ஒரு முனிவன் (2 திருவஷ்ணர்ச்சுனரில் அர்ச்சுனன். (3) பிரியவிரதன் மரபில் கயன் புத்திரன் (4) புமஞ்னியன் மகன். இவன்மகன் சங்கிருதி.

நராந்தகன் — இராக்கதன் இராவணன் மகன். அங்கதனாற் கொல்லப்பட்டவன்.

நரிவிருத்தம்—சிவகசிந்தாமணி யியற்றிய திருத்தக்க தேவராற் செய்யப்பட்டதொருநூல் இது சீவகன் சரிதையை நூல்செய்தற்கு ஆசிரியர் கட்டளைபெறக் கேட்ட தேவரை ஆசிரியர் தெளியாது அருகிற்கண்ட நரியொன்றைச் சுட்டி யிதனை வருணித்துச் சொல்கவெனக் கேட்டுழி, அவராற் செய்யப்பட்டதென்பர். அதுகேட்டு மனத்திர்ப்தி கொண்டு சீவகன் சரிதையைக் கவிசெய்யக் கட்டளை தந்தனராம்.

நரிவெரூஉத்தலையார்—இவர் எக்காரணத்தாலோ தம்முடம்பி லுளதாகிய வேறுபாட்டால் இப்பெயரேற்றவர். சேரமான் கருவூரேறிய ஒள்வாட்கோப் பெருஞ்சேர லிரும்பொறையைக் கண்டவுடனே அவ்வேறுபாடு நீங்கப்பெற்று அவனைப் புகழ்ந்து பாடியவர். [புறநா] திருவள்ளுவமாலை கூறிய கடைச்சங்கப்புலவரி லொருவர்.

நரிஷ்யந்தன—(1) வைவசுவத மநு புத்திரன். (2) மநு சக்ரவர்த்தி புத்திரன்.

நர்மதை — மேகலாபர்வதத்தி லுதித்தோடும் ஒருநதம். [ருபநதி.

நலை — கங்கையிற் சங்கமமாகும் ஒ

நல்கூர்வேள்வியார் — திருவள்ளுவமாலைசொல்லிய கடைச்சங்கப்புலவரி லொருவர்.

நல்லந்துவனார் — திருவள்ளுவமாலை சொல்லிய கடைச்சங்கப் புலவரிலொருவர். இவரே கலித்தொகையியற்றியவர். அதன் முதலிலுள்ள கடவுள் வாழ்த்தால் இவர் சைவரென வூகிக்கப்படுகிறது.

நல்லாதனார்—கடைச்சங்க காலத்திலிருந்தஒருபுலவர். சுக்குத்திப்பிலி மிளகெனு மூன்றும் உட்கொண்டார் பிணியை யொழிக்குமாப்போல ஒவ்வொரு செய்யுளிலும் மும்மூன்றுநீதிகள் கூறித் திரிகடுகமென்னு மொருநூ லியற்றியவர். அது சங்கமருவிய பதினெண்கீழ்க்கணக்கினு ளொன்றாயுளது. இவர் தந்நூலின காப்புச் செய்யுளில் "பூவைபபூ வண்ண னடி" எனத் திருமாலைத் துதித்தமையின் வைணவரென எண்ணப்படுகிறார்.

நல்லாப்பிள்ளை—தொண்டை நாட்டுச் சிறந்த புலவர்களி லொருவர். சுமார் இருநூறு வருடங்கட் குட்பட்டவர். கருணீக குலத்தினர். இவர் வில்லிப்புத்தூராழ்வா ரியற்றிய 4350 பாடல்களாகிய பத்துப் பருவங்க ளடங்கிய பாரதத்தை வடமொழி வியாஸ பாரதம்போல

விரித்துரைக்க வெண்ணி இடையிடையே கதைகளை விளக்கியும் இறுதியில் விடுபட்டிருந்த எட்டுப் பருவங்களைச் சேர்த்தும் 14728 பாடல்களாக விளக்கச்செய்தவர். இவர்பாரதம்பாடுகையில் இருபது வயதினரெனச் சிலர் கூறக்கேளவி. நல்லாப்பிள்ளை யியற்றியபாடல்களை மட்டும் வாசித்தால் கதைத்தொடர்பிராது. ஆழ்வார் பாடல்களை மட்டும் வாசித்தால் கதைசுருக்கமாக விளங்கும் என்றால் இவர் தனியே நிலவுங் கருத்துட்கொண்டவரல்லரென விளங்கும். இவர் மரபினர் சிலர் இன்றும் சென்னையிலுளர்.

நல்லியக்கோடன்—பத்துப் பாட்டில் நல்லூர் நத்தத்தனார் பாடிய சிறுபாணாற்றுப்படைக்குத் தலைவன். வேலூரில் அரசு புரிந்தவன். இவன் தன் பகைமிகுதிக்குப்பயந்து முருகக் கடவுளை வழிபட்ட விடத்து அவ்விறைவன் "இக கேணியிலுள்ள பூவை வாங்கிப் பகைவரையெறி" எனக் கனவிலருளி, அப்பூவைத் தனது வேற்படையாக நிறுவ அதனால் வெற்றி யடைந்தவன். இதுகாரணமாக அவ்வூரும் வேலூரெனப் பேரேற்றது.

நல்லிறையனார்—சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடியபுலவர். [புறநா]

நல்லூர்நத்தத்தனார்—பத்துப் பாட்டிலொன்றாகியசிறுபாணாற்றுப்படையை நல்லியக்கோடன்மேற்பாடிய புலவர்.

நல்வழி— நல்லிசைப்புலமை மெல்லியலாரிலொருவராகிய ஒளவைப் பிராட்டியாரால் நாற்பது வெண்பாக்களாகச் செய்யப்பட்டதொரு நீதிநூல். [காண்க.

நவகண்டங்கள் — நவவர்ஷங்களிற்

நவக்ரகங்கள்—சூரியன் சந்திரன் அங்காரகன் புதன் குரு சுக்கிரன் சனி ராகு கேது வெனப்படுவோர்.

நவநதிகள்— தம்பால் மூழ்கினோர் பாவங்களைப் பரிகரிக்கும் ஒன்பது புண்ணிய நதிகள். அவை கங்கை யமுனை நருமதை சரசுவதி சிந்து காவிரி சரயு குமரி பயோஷ்ணியென்பன. [மகன்.

நவரதன்—யதுமரபினன். வீமரதன்

நவரத்தினம்—(1) ஒன்பது மணிகள். அவை முத்து பவளம் பச்சை வைடூயம் கோமேதகம் புட்பராகம் நீலம் மரகதம் வைரமெனப்படும் (2) உச்சயினி நகரத்தரச னாகிய விக்கிரமார்க்கன் அவைக்களத்திருந்த சிறந்த ஒன்பது பண்டிதர்கள். அவர்கள் தந்வந்திரி க்ஷபணகர் அமரஸிம்ஹர் கடகர்ப்பரர் காளிதாசர் வராஹமிஹிரர் வரருசி முதலியோர். இவர்களைப் பற்றியவிடயங்களை அவரவர் பெயர்ச்சிறப்புகளிற் காண்க.

நவராத்திரி—ஐப்பசிமாச பூர்வபக்ஷ பிரதமைமுதல் ஒன்பது ராத்திரிகளில் அநுஷ்டிக்கப்படு விரதம். துர்க்கை லக்ஷ்மி சரசுவதி இவர்க்கு முறையே மும்மூன்று தினம் பூசை செய்து இறுதி தினமாகிய ஒன்பதாம் தினத்தில் பல ஆயுதங்களையும் புஸ்தகங்களையும் ஆராதிப்பது. இதன் மறுதினம் விஜயதசமி. அது வித்தியாப்பியாச முதலியவற்றிற்குச் சிறந்த தினமாக

நியமிக்கப் பட்டது. இவ் விரதம் கிருதயுகத்திலே அங்கிரச முனிவன், தன் நாட்டை யிழந்து மனைவியொடு வனஞ்சென்று தன்னை யடைந்த சுகேதனெனு மரசனுக்குபதேசித்து, அவனால் அநுஷ்டிக்கப்பட்டு மீண்டும் தன் ஐசுவரியங்களை யடையச்செய்த மகிமையது.

நவவடிவிறந்தோன் } சிவபெருமான்.
நவவடிவினன் } பிரமன் விஷ்ணு ருத்திரன் மகேசன் சதாசிவன் விந்து நாதம் சத்தி சிவமெனும் ஒன்பது வடிவாகவுளளவன். அல்லது ஒன்பதுங் கடந்தவ னென்பது பொருள்.

நவவர்ஷங்கள்—பூமியின் மழைபெயல் முதலியவற்றின் வேறுபாடுகளால் பிரிக்கப்பட்ட ஒன்பது பாகங்கள். அவை பாரதம் கிம்புருஷம்(?) ஹரி இளாவிருதம் ரம்மியம் ஹிரண்மயம் குரு பத்திராசுவம் கேதுமாலமென்பன. இளாவிருதம் துருவத்தை மத்தியிலுடையதும், ஹரிவர்ஷம் அதன் தெற்கிலுள்ளதும், கிம்புருஷம் அதன் தெற்கிலுள்ளதும், பாரதம் அதன் தெற்கிலுள்ளதுமாம். இளாவிருதத்தின் வடக்கே ரம்மியகம் ஹிரண்மயம்குருவென்னும் வர்ஷங்களுள. இருபக்கவிலும் பத்திராசுவம் கேதுமாலமெனும் வர்ஷங்களுள.

நளம்—(1) சிற்பநூல்கள் முப்பத்திரண்டனு ளொன்று. இது நளனென்போனாற்செய்யபபட்டது. (2) நளராசனாற் செய்யப்பட்ட வடமொழிப் பாகசாத்திரம்.

நளகூபரன்—குபேரன் மகன். மணிக்கிரீவனுக்கு மூத்தவன். சகோதரரிருவரும் ஒருதடாகத்தில் நிர்வாணிகளாகச் சலக்கிரீடை செய்துகொண் டிருக்கக் கண்ட நாரதமுனிவர் சினந்து இத்தோஷத்தால் மருத மரங்களாகக் கடவிரெனச் சபித்த வண்ணம் நந்த கோபன் மனைக் கருகே இருமருதங்களாகவிருந்து, யசோதையாற் கட்டப்பட்ட உரலுடன் கண்ணனுலிடறப்பட்டுச்சாய்ந்து சாபமொழிந்து கண்ணனை வழிபட்டுப் பண்டையவடிவேற்றுச் சென்றனர்.

ஒருகாலத்தில் தக்ஷன் தன்குமாரனை யழைத்துச் சென்று குபேரபட்டணத்திலிருத்தி, இந்திரனைக் காணச் சென்றபொழுது நளகூபரன் இங்கொரு பாம்பிருக்கிறதெனவாளால் வெட்டினன். தக்ஷன் திரும்பிவந்து தன்மக னிறந்திருக்கக் கண்டு நளகூபரனைப் பாம்புகடித்திறக்கவெனச் சபித்து மிருதசஞ்சீவினி மந்திரத்தால் மகனை உயிர்பெறச் செய்துகொண்டு சென்றனன். இக்காரணத்தால் இவனே லோகிதாசியனெனப் பிறந்து அரவா லுயிர் நீத்துச் சாபம் போக்கினன.

நளவெண்பா—நிடதநாட் டரசனான நளன் சரிதையை வெண்பாவாற் கூறுநூல். இது வெண்பாவில்வல்லபுகழேந்திப் புலவரால் மாளவநாட்டரசன் சந்திரன் சுவர்க்கியின் விருப்பின்படி செய்யப் பட்டது. இதில் சுயமவரகாண்டம் கலிதொடர் காண்டம் கலிநீங்கு காண்டமென மூன்று காண்டங்களுள.

நளன்—(1) நளமெனுஞ் சிற்பநூலாசிரியன். (2) யயாதியின்பௌத்திர

னன அனுவின் இரண்டாம் புத்திரன். (3) யதுவின் மூன்றாம் புத்திரன். (4) ஷட்சக்கிரவர்த்திகளிலொருவன், வீரசேனன் மகன். நிஷதநாட்டரசன். விதர்ப்பநாட்டரசனான வீமன்மகள் தமயந்தியின் கணவன். இவனது பிரபாவங்களை அன்னப்பறவை யொன்று சொல்லக்கேட்டது முதல் இவன் பால் பெருவிருப்புற்று ஊணுறக்க முதலியனவு மின்றித்தமயந்தி வருந்தவ துணர்ந்த வீமராசன் சுயம்வரமென்று பலதேசத் தரசர்க்குந் தெரிவிப்ப யாவருங் குழுமினர். அவளது ரூபலாவண்யங்களை நாரதமுனிவராற் கேள்வியுற்ற இந்திராதி தேவர்களும் வந்திருந்தனா தமயந்தியோ ஒரு சிறிதும் மனஞ் சலியாது நளனையே மாலையிட்டனள். அக்காலத்திற் கலிபுருஷன் தமயந்தியை யடையத் தவறியது பற்றி இவள் கணவனோடுகளித்து வாழவிட்டேனோ எனச் சபதஞ்சொண்டு சின்னாட்பின்றை, புட்கரனைக் கொண்டு சூதாடச் செய்து மாயையால் நளன்செல்வ முழுவதையும் புட்கரனுக்கு மாற்றிவிட, நளதமயந்தியர் கட்டிய ஒவ்வோருடையுடன் நகர் நீங்கினர். இவர் புதல்வன் இந்திரசேனனும், புதல்வி இந்திரசேனையும்விதர்ப்பநாடு அனுப்பப்பட்டனர். நளனுந் தமயந்தியும் பசியால்வருந்தி வழிநடையாற் களைத்துத் தளர்ந்து செல்கையில் பறவை யொன்றைப்பற்ற நளன் தன் மேலாடையை அதன் மேற் போர்த்த அது அதனோடு பறந்து மேலே சென்று உன்னுடை தோற்பித்தவன் நானே யென்று போயது. இருவரும் ஒருடையைத் தரித்து ஒருபாழ் மண்டபத்தில் இராத் தங்குகையில் நளன் தமயந்தி யணிந்திருந்த ஆடையில் நான்குமுழங் கிழித்துடுத்துக் கொண்டு தனிப்பட்டு, வழியில் புதரிலெரியாற் றுன்புற்று வருந்திய சர்ப்ப மொன்றிற்கு மனமிரங்கி அதனை வாலிற்பற்றியீர்த்துப் புறத்தேவிட அஃதவனைக் கடித்துக் கைகுறையச் செய்தமையின் வாகுகனெனும் பெயருடன் அயோத்தியடைந்து இருதுபன்னனுக்குச் சாரதியாயமர்ந்தனன். நித்திரை தெளிந்த தமயந்தி கையாற்றடவி நளனைக் காணாது வருந்திப் பிரலாபித்துத் தனக்குக் கணவனுணர்த்தியவழியே தந்தைவீடு நோக்கிச் செல்லுகையில், பெரும் பாம்பொன்று தன்னைவிழுங்க, அரசனே! அபயமெனக் கூக்குரலிட, அருகிருந்த வேடனொருவன் அப்பாம்பினின்று விடுவித்துத் தன்னுடன்கூடி யிருக்கும்படி சொல்ல, பலவாறு மதிகூறியுங் கேளாமையின்சினந்து அவனைச்சாம்பராக்கி, வழிக்கொண்டு சென்று பலமுனிவராச்சிரமங்களையுந் தரிசித்துக் கொண்டு பொதிமாட்டு வணிகர் சிலரைத் துணைப்பற்றிக்கொண்டு செல்லுகையில் அஸ்தமிக்க அங்கோர் குளத்தருகே யாவருமிறங்கி அயர்ந்து நித்திரை செய்கையில் காட்டானைகள் அவர்களை யெல்லாமழித்தமை கண்டு என்னைக்கொல்கவென அவற்றின் அருகேசென்றும் அவையோடமிருதியும்மனம்

வருந்தி விடிந்தவுடன் சேதிநாட்டில் இராஜவீதியிலே செல்ல, அவள் சிறிய தாய் மேன்மாடியினின்று கண்டு வரவழைத்து யாரென விசாரிப்ப, யான் அரண்மனைத்தோழியென, அப்படியாயின் இங்கிருக்கலாமென, யான் ஒருவர் பாதத்தையுந் தொடேன். பிறர் மிச்சிலைநுகரேன் என, அவள் அதற்கிணங்கி அங்கேயே யமர்த்திக்கொண்டனள். சிலகாலத்தில் வீமராசனுடைய தூதுவரால் தமயந்தி விதர்ப்பநாடு சேர்ந்தனள். நளனை இருதுபன்னனிட மிருப்பதாகத் தெரிந்து, தமயந்திக்கு இரண்டாஞ் சுயம்வரமென இருதுபன்னன்சபையில் உணர்த்தினர். இருதுபன்னன் தமயந்தியை விரும்பி வாகுகனைச் சாரதியாகக் கொண்டு விரைந்து செல்கையில், மேலாடை வீழ்ந்ததெடு வென்றதனுள் இருபத்துநான்கு காதஞ் செல்லக் கண்டு, இருதுபன்னன் நளனிடம் அசுவஹ்ருதயவித்தையும், நளன் இருதுபன்னனிடம் அஸ்திரப்பிரயோக வித்தையும் தெரிந்துகொண்டு விதர்ப்பநாடடைய, இவ்வளவு விரைவில் இரதத்தைக்கொண்டு வந்தவன் நளனே யென்றும், அவனுடைய பாகநுகர்ந்துகண்டு இது நளபாகமே யென்று முணர்ந்து, வீமராசனால் இருதுபன்னன் சாரதியாக வந்திருந்த நளனைத் தமயந்திக்கருவித்துப் பலவாறு துதித்துப் பண்டையவடிவெய்தச் செய்தனள். இருதுபன்னன் கண்டு நளனைப்பணிந்துபிரார்த்தித்து விடைகொண்டு சென்றனன். பின்னுட் சென்றபின் நளன் தமயந்தியோடு நிடதநா டடைந்து புட்கரனைக் கண்டு பண்டுபோல் சூதாடி நாடு நகரங்களை வென்று அரசனாயிருந்தனன். ஜன்மாந்தரத்தில் நளன் ஆகுகனெனும் வேடன். தமயந்தி ஆகுகியெனும்வேடிச்சி. அன்னம் ஒருசன்னியாசி. இவர்கள் பூர்வசரிதையை ஆகுகனிற் காண்க. (5) விசுவகர்மாவுக்குத்தோன்றிய ஒரு வாநரவீரன். இவனே சேதுபந்தனஞ் செய்தவன்.

நளாயினி—நாளாயணியிற் காண்க.

நளினி—ஹஸ்திகன் மருகி. அஜமீடன் இளையமனைவி.

நளினை—கனகமாலையின் தாய். [சீவ]

நளை—கங்கையின் உபநதிகளி லொன்று. இதுநலையென்றும்வழங்கும்.

நள்ளி—மலைநாட்டரசன். கடையெழுவள்ளல்களி லொருவன். பெருஞ்சாத்தனாராற் பாடப்பெற்றவன். கண்டீரக் கோப் பெருநள்ளியிற் காண்க.

நறுந்தொகை—அதிவீர ராமபாண்டியனாற் செய்யப்பட்ட தொரு நீதிநூல். இது முதற்குறிப்பாக வெற்றிவேற்கை யென்றும் பெயர் பெற்று நிலவுகின்றது.

நற்றத்தனார்—அகத்தியமுனிவர் பால் அருந்தமிழ் பயின்ற மாணவர் பன்னிருவரில் ஒருவர்.

நற்றிணை—எட்டுத்தொகை நூலுள் முதலாவது. கடைச்சங்கப் புலவர் செய்தது. பாரதம் பாடிய பெருந்தேவனார் பாடிய கடவுள் வாழ்த்தும், கபிலர் முதல் ஆலங்குடி வங்கனா ரிறுதியாகவுள்ள புலவர்கள் பாடிய நானூறுபாக்களு முடை

யது. இந்நூலைத் தொகுப்பித்தோன் பன்னாடுதந்த பாண்டியன் மாறன் வழுதி. இவ் வகவற்பாக்கள் அகப்பொருளையே பொருளாகக்கொண்டு 9 அடிச்சிறுமையும் 12 அடிப் பெருமையு முள்ளவை.

நற்றுணையப்பர் — திருநனி பள்ளியிற் சிவபெருமானுக்கு வழங்குந் திருநாமம்.

நன்றா—ஒருகுன்று. இதுசேரநாட்டிலுள்ளது. செல்வக்கடுங்கோவாழியாதன்தன்மீது (பதிற்றுப்பத்தில்) ஏழாம்பத்தினைப்பாடிய கபிலர்க்கு இதன்மீதேறி நின்று கண்டநாட்டினைப் பரிசளித்தது.

நன்னயபட்டாரகன்—(ஆந்திர) தெலுங்குகவிகளில் முதலாவான். வேங்கிதேசாதிபனான இராஜராஜ நரேந்திரன் இராஜமகேந்திரத்தில் அரசனாயிருக்கையில் அவன்பால் ஆஸ்தானபண்டிதரா யிருந்தவர். அரசன் கட்டளையால் பாரதத்தில்முதலிருபருவங்களும் ஆரண்ணியபருவத்திற் சிறிதுபாகமு மொழிபெயர்த்துக் காலஞ் சென்றவர் [மற்றபாகங்கள் திக்கன சோம யாஜிமுதலியோரால் மொழி பெயர்க்கப்பட்டன.] இவர் ஆந்திர சப்தசிந்தாமணி யெனுந் தெலுங்கிலக்கணமொன்றியற்றியவர்.

நன்னன்—விச்சிக் கோவின் மரபில் மூதாதைகளி லொருவன். மலைபடுகடாம் எனும பிரபந்தம் தன்மீது பாடப்பெற்ற நன்னன் இவன் மகன் இவன் பெண் கொலை புரிந்தவனெனத் தெரிய வருகிறது. ஆயினும் புகழுடையான். இவன் புகழ் அகநானூறு புறநானூறு எனுந்தொகை நூலிற் கூறப்பட்டுளது. வடஆற்காடு தென்னாற்காடு ஜில்லாக்களிலுள்ள பல்குன்றக் கோட்டமெனும் ஊரையாண்டவன்.

நன்னாகனார்—கரும்பனூர் கிழானைப் பாடிய புலவரிலொருவர் [புறநா]

நன்னூல்—இக்காலத்திற்பிரபலமாக விளங்குமொரு இலக்கண நூல். இது சநகாபுரத்துச் சன்மதி முனிவர் புத்திரராய பவணந்தி முனிவரெனும் சைனராற் செய்யப்பட்டது. இதனைச் செய்வித்தவன் சீய கங்கனெனும் மன்னவன். "அரும்பொருளைந்தையும் யாவருமுணரத், தொகை வகை விரியிற் றருகென" எனச் சிறப்புப் பாயிரத்துச் சொல்லப்பட்டிருப்பினும், எழுத்துஞ் சொல்லுமே காணப்படுகின்றன. எஞ்சியமூன்றும் செய்யக் கருதியிருந்து அங்ஙனஞ்சொல்லினரோ, அல்லது செய்யப்பட்டுப் பகைஞர் முதலினோராலோ வேறு காரணங்களாலோ யிறந்தொழிந்தனவோ என வெண்ணவேண்டியதாயது. மற்றப் பாகங்களும் இவராற் செய்யப்பட்டு நிலவின் விசேஷித்து விளங்கு மென்பதற்கையமின்று. சுருங்கச் சொல்லன் முதலிய பத்தழகுங் கொண்டு குன்றக்கூறலாதிய குற்றங்களின்றிவிளங்குகின்றது. இவரேவடநூற்கொள்கையராய்ப் பகுபதம் பகாப்பதங்களை வகுத்துக் கூறியவர். சமணநூலாதாரங்களால் எண்ணூறு வருடங்கட்கு முற்பட்ட நூலெனஎண்ணக்கிடந்தது. இந்நூலுக்கு முதலிலே மயிலைநாதரெனும் சமணர் உரை செய்தனர். பின்னர்,

சங்கர நமச்சிவாயப் புலவரால் செய்யப்பட்ட விருத்தியுரை திருவாவடுதுறையிலெழுந்தருளி யிருந்த சைவ பாநுவும் திராவிட மாபாடிய கர்த்தருமாகிய ஆசிரியர் சிவஞான யோகிகளால் திருத்தப்பட்டும் பலரால் உபயோகிக்கப்பட்டும் விளங்குகின்றது. முகவை இராமானுஜ கவிராயரும் இராமானுஜ காண்டிகையென ஒரு விருத்தியுரை செய்துளர். திருத்தணிகைச் சரவணப் பெருமாளையர் காண்டிகையுரை யொன்று செய்து* தந்தமையர் விசாகப் பெருமாளையர் பெயரால் வெளியிட்டுளர். இவர்களே முறைப்பட உரையிட்டவர்கள். இவ்வுரைகளைத் தழுவியும் சிறிது மாற்றியும் குறைத்தும் உரை செய்தோர் எண்ணிலர். இந்நூல் "முன்னூ லொழியப் பின்னூல் பலவுளுங், எந்நூலாரும் நன்னூலாருக், கிணையிலை யென்னுந் துணிவே மன்னுக" எனவிதந்தோதப்பட்டது. இது 464 சூத்திரங்களையுடையது.

நன்னெறி—வீரசைவ மதோத் தாரணராய் விளங்கிய துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளால் நாற்பது வெண்பாக்களால்கூறப்பட்டதொருநீதி நூல். சொன்னய முதலியவற்றிற் சிறந்தது.

## நா.

நாககுமாரகாவியம்--சங்கமருவியசிறு காப்பியங்கள் ஐந்தனுளொன்று.

நாகதன்வம்—ஒருவிஷம். இதனாலேயே வாசுகியை நாகராஜனுக்க அபிஷேகஞ் செய்யப்பட்டது.

நாகநாட்டரசர்—(1) இந்திரர் (2) மணிபல்லவத்திருந்த புத்த பீடிகையையெடுத்துச்செல்லமுயன்று தம்முட் பகைத்துப் போர்புரிந்த இரண்டரசர்.

நாகபுரம்—புண்ணிய ராசன் இராஜதானி, சாவகநாட்டிலுள்ளது. இதனைப் போகவதிபுரமெனச் சிலாசாசனங்களிற் காணலாம் [மணி]

நாகமாலை—சச்சந்தனது அகப்பரிவாரத்துள்ளாளொருத்தி [சீவ.க]

நாகமுக்கியர்—கசியபருக்குங் கத்தருவுக்கும் பிறந்தவர்கள் அவர்களெல்லாம் நாகராயினர். அவருள் சேஷன் - வாசுகி - ஐராவதன் - தக்ஷகன் - கார்க்கோடகன் - தநஞ்சயன் - காளியன் - மணி நாகன் - ஆபூரணன் - பிஞ்ஞரன் - ஏலாபுத்ரன் - வாமநன் - நீலன் - அநீலன் - கன்மாஷன் - சபலன் - ஆர்யகன் - ஆர்த்ரகன் - கலசபோதகன - சுராமுகன் - ததிமுகன் - விமல பிண்டகன் - க்ஷாரிதன் - சங்கன் - வாலசிகன் - நிவ்ஷ்டாநகன் - ஹேமநேத்ரன் - நகுஷன் - பிங்களன் - பாஹ்ய கர்ணன - ஹஸ்திகர்ணன் மூத்கர பிண்டகன் - கம்பளன் - அசுவதரன் - காளியகவ்ருத்தன் - ஸம்வ்ருத்தன் - சங்கமுகன் - குஷ்மாண்டகன் - க்ஷேமகன் - பிண்டாரகன் - கரவீரன் - புஷ்பதம்ஷ்ட்ரன் - பில்வகன் - பில்வபாண்டரன் - மூஷிகாதன் சங்கசிரன் - பூர்ணதம்ஷ்ட்ரன் - ஹரித்ரகன் - அபராஜிதன் - ஜ்யோதிகன் - ஸ்ரீவஹன் - கௌரவ்யன் - த்ருதராஷ்டிரன் - சங்க பிண்டன் - புஷ்கரன் - சல்யகன் - விரஜன் - சுபாகு

சாலிபிண்டகன் - ஹஸ்திபிண்டகன் - பிடாகன் - முகுரன் - கோணநாசிகன - குடாரன் - குஞ்ஜரன் - ப்ராபாகரன் - குமுதன் - குமுதாக்ஷன் - தித்திரி - ஹலிகன் - கர்த்தமன் - பஹுமூலகன் - கர்க்கரன் - அகர்க்கரன் - குண்டோதரன் - மஹோதரன் எனப்படுவோர் முக்கியர்களாகச் சொல்லப்படுவோர்கள்.

நாகரியர்—சங்க வருணரிற் காண்க.

நாகர்—ஒரு வகையினர். இவரைநக்கசாரணரென மணிமேகலை கூறும்.

நாகவீதி—தருமன்மகள் இவள் தாய் ஜாமி அல்லது யாமி. இவள்நக்ஷத்திர வீதியின வடபாகத்திற்கு அபிமான தேவதை யெனப்படுவள்.

நாகன்—தசவாயுக்களிலொன்று. நீட்டல் முடக்கல் இளக்கல் செய்வது.

நாகன்தேவனார்—திருவள்ளுவமாலை பாடிய கடைச்சங்கப் புலவரிலொருவர்.

நாகாம்பிகை—கிருஷ்ணதேவராயன் [தாய்.

நாகாநந்தம்—தயையைப் புலப்படுத்து தலையே பயனாகக் கொண்டு (வைஷதமியற்றிய) ஸ்ரீ ஹர்ஷகவியாற் செய்யப்பட்ட நாடக கிரந்தம். ஜீமுதவாஹன் சரிதமாக வுள்ளது. இவன் கௌதம புத்தருடைய பழைய அவதாரங்களில்ஒரு அவதாரமெனச் சொல்லபபடுகென்

நாஞ்சில் வள்ளுவன்—நாஞ்சில் மலையையுடையோன். சேரனிடத் தன்புற்றச் சேனா நாயகனாய் நின்றோன். பரிசிலர்க்கு மிகக்கொடுத்தோன். இவனைப் பாடினோர் ஒரு சிறைப் பெரியனார், மருதன் இளநாகனார், கருவூர்க்கதப்பிள்ளை முதலினோர் [புறநா]

நாஞ்சின்மலை—மலைநாட்டுள்ளது. சேரனுக்குப் படைத்தலையாய்நின்ற மிக்க வண்மையுடைய நாஞ்சில் வள்ளுவனென்பான் ஒருகாலத்தில் இம்மலைக்குத் தலைவனா யிருந்தானென்று புறநானூற்றிற் சொல்லப்படுகிறது. இது உழா நாஞ்சிலென்றுங் கூறப்படும்.

நாடிக் கிரந்தம்—உலகிலுள்ள மாநுடர் பலர்க்கும் ஜாதக பலன் முதலியன கூறப்பட்டுள்ள பதினொரு நூல்களும் நாடிக் கிரந்தங்களெனப் பெயர் பெறும். அவற்றை யியற்றினோர் சூரியன் - சந்திரன் - குஜன் - புதன் - குரு - சுக்கிரன் - சனி - ராகு - கேது - சர்வசங்கிரகன் பாவன் - துருவன் - சர்வன் - சுகன் - தேவியெனப்படுவோர். அவை ஒவ்வொன்றும் ஆக்கினோர் பெயரால் வழங்கும்.

நாதமுனிகள் — வைணவாசாரியரிலொருவர். வீரநாராயண புரத்தில் நித்தியவாசஞ் செய்து கொண்டிருந்த ஈசுவர முனிகள் குமாரர். நாதரெனும் பிள்ளைத் திருநாமம் பூண்டு பிறவித் தொடக்கமாகப் பகவத் பக்திமேலிட்டு, வங்கிபுரத்தாச்சியின் குமாரத்தி அரவிந்தப்பாவையை மணந்து வீரநாராயண புரத்திலேயே யோகநிஷ்டராயிருந்தவர். இவர் குமாரரும் ஈசுவரமுனியெனப் படுவர். நாதமுனிகள் பல திவ்விய தேசயாத்திரைகள் செய்து வீரநாராயணபுரமடைந்து அங்கிருந்து திருக்குருகூரடைந்து திருவாய் மொழியை இயலுமிசையுமாக உலகில் வழங்கச் செய்தவர். இவ்விடயம் நம்

மாழ்வாரிற் காண்க. நாதமுனிகள் தம்சீடரான புண்டரீகாக்ஷன்-குருகைக்காவலப்பன் - நம்பி கருணாகரதாசர் - ஏறு திருவுடையார் - திருக்கண்ண மங்கையாண்டான்-வானமாதேவியாண்டான் - உறப்புட்போச்சான்பிள்ளை- சோகத்தூராழ்வான் முதலினேருக்கு மந்திரோபதேச முதலியவற்றை யருளி யோகத்தி லமர்ந்தனர். இவர் பேரனார் யமுனைத்துறைவர்.

நாதவன் — குண்டலபுரத்தின் முதலரசன். இவனாற்றோன்றிய குலம நாதலகுலம். [சூளா]

நாந்தகம்—திருமாலின் வாள்.

நாபாகன்—(1) இக்ஷ்வாகுமகனான திஷ்டன் மகன். தன செய்கைகளால் வைசியத்துவ மடைந்தவன் [சுப்பிரபையெனும் ஒரு வைசியப் பெண்ணை மணந்து வைசியனானன என மார்க்கண்டேய புராணங் கூறும்] இவன் மகன் பலந்தனன். இப்பலந்தனன் தன் தந்தை வைசியனாகுமுன் பிறந்தமையின க்ஷத்திரியத்துவத்தையிழக்கவில்லையென விஷ்ணு புராண வியாக்கியானத திற் காணப்படுகிறது. மீண்டுந் தவஞ்செய்து நாபாகன் ராஜருஷியாயின னெனச்சிலர் சொல்லுகிறார்கள் (2) இக்ஷ்வாகுவின் தம்பியான நபகன் மகன். அம்பரீஷன் பிதா. இவன சத்தியத்திற்கு மெச்சிய சிவபிரான் அப்பர் தாசிதது வரும் ஸநாதநந்தமான பிரம ஞானமும் இவனுக்கு உபதேசித்தனர். (3) சுகோத்திரன் மகன்.

நாபி—ஆக்நீத்திரன் புத்திரர் ஒன்பதின் மரிலொருவன். இவன்பங்காக ஜம்புத்வீபம்கிடைத்தது. இவன் மனைவி மேருதேவி. புத்திரர்ருஷியன் முதலிய ஒன்பதின்மர்.

நாமகள்—சரசுவதி தேவி. [நாவின் கண் விளங்குபவள்]

நாமசங்கிதை—சிற்ப நூல்கள் முப்பத்திரண்டனுளொன்று.

நாரசிங்கமூர்த்தி—திருமாலின் அவதாரங்களிலொன்று. நரசிங்காவதாரத்திற் காண்க.

நாரசிங்கம்—உப புராணங்கள் பதினெட்டனுளொன்று.

நாரதர்—(1)ஒருமுனிவர். இவர்பிரமமாநசபுத்திரர். இவர் முன் கற்பத்திலே உபபர்ஹணனெனும்கந்தர்வனாக தோன்றி வீணா கானத்திலே வல்லமையுற்று வேதியர் சிலர் சேர்ந்து செய்த யாகத்திற்கு அவர்கள் விரும்பிய வகையே சென்று வீணா கானஞ்செய்து அங்குற்றிருந்த சில மங்கையரைப் புணர்ந்துசெல்ல, அஃதுணர்ந்த அந்தணர் இவனைச் சூதசூத்ர குலத்திற் பிறக்கச் சபிகக, அஙஙனமே பிறந்து பூர்வ ஜன்ம வாசனையால் பெரியோர்க்குப் பணிபுரிந்து அப்புண்யத்தால் இம்மகா யுகத்தில் பிரம மாநச புத்திரராய்ப்பிறந்தவர். 'நாரதா கலஹப் பிரியஃ' என்றபடியே கலகஞ் செய்வதிவர்க் கியற்கை- தக்ஷப் பிரஜாதிபதியின புதல்வரையெல்லாம் விரக்தி பரராக ஞானோபதேசஞ் செய்து சிருஷ்டி கைகூடாவண்ணம் ஒரு முறையன்றி இரு முறையுந்தடுத்தமையின்,தக்ஷனால்நிலையற்றலைக,சந்ததியில்லாதவனாக, எனச்சபிக்கப்பெற்றவர். தேவசபைகளிலும் ராஜசபைகளி

லும் பலவிடங்களிலும் எவ்விடத்துஞ் செல்லத்தடை பெறுதவர். இவரைத் திரிலோகசஞ்சாரியென்பர். ஆங்காஙருணர்ந்த அதிரகசியங்களை யாவர்க்கேனுந் தெரிவியா தொழியின் இவர் வயிறு வெடித்துப்போமாம். தருமோபதேசம் தூதுபோதல் சமத்கார வசனம் வீணைகானம் முதலியவற்றிலெல்லாம் சமானுதிகரகிதர். இராமாவதார விடயம் தேவசபையில் நடந்ததை வான்மீகிக்கும், கண்ணன் பிறப்பைக் கஞ்சனுக்கும், தக்ஷயாகத்தைத் தாக்ஷயணிக்கும், இன்னோன்ன பலவிடயங்களையும் வெளிப்படுத்தியவர். ஒவ்வொரு புராண சரிதையும் இவர் சம்பந்தமுடையதாகவேயிருக்கும். இவர் வீணையை மகதி யென்று சொல்லுவர். இவரைப் பற்றிய வேறு சில விடயங்களைப் பர்வதனிற் காண்க. நாரதரென்றதற்கு நாருக்கு இதஞ்செய்வோர் எனப் பொருள் (2) புத்தர்களிற் பன்னிரண்டாவதாகத் தோன்றியவர்.

நாரதீயம்—நாரதமுனிவராற் செய்யப்பட்டது. (1) விஷ்ணுபுராணங்கள் நான்கனுளொன்று. இருபத்தையாயிரங் கிரந்தங்களையுடையது. (2) ஒருபபுராணம். (3) இராகதாள பாவங்களை விளக்கிக் கூறுவதொருநூல்.

நாராயண கோபாலர்—யாதவர்கள். வெற்றி பெறுதலில் கண்ணனையொத்தவர்கள். இவர்கள் கோபாலகுமாரர்களெனவும் படுவர். தொகையால் பதினாயிரவர். கண்ணன் அர்ச்சுனன் பக்கலிற் சேர்ந்தது கருதி, துர்யோதனன் வருந்த, இவர்களெல்லாம் துர்யோதனுக்குத் துணைசெல்லும்படி கண்ணனால் கொடுக்கப்பட்டு, அர்ச்சுனனோடு பெரும் போர்செய்து ஒருசேர அர்ச்சுனனாற் கொல்லப்பட்டிறந்தவர்கள்.

நாராயணன்—திருமால். நீரம்= ஜலம். நாரத்தை யிடமாக வுடையவனென்பது சொற்பொருள். மகாப்பிரளயத்தில் யாவும் ஜலார்ணவமாய் ஒடுங்கிய பொழுதும் உள்ளவனென நூல்கள் நுவலும். மகாசிருஷ்டியில் சிவபெருமானது வாம பாகத்தினின் றுதித்ததாக ஆகம புராணாதிகள் கூறுகின்றன. திருமகள் கொழுநனாகலின் சீதரன், மாதவன், முண்டகாசனை கேள்வன், பலவகை மாயைகளையுஞ்செய்யவல்லவனாகலின் மாயன் விகுண்டன்; கருநிறமுடைமையின் கொண்டல் வண்ணன்; வசுதேவகுமாரனாகலின் வாசுதேவன்; பசுக்களை மேய்த்தும் அதன்மேலேறியும் விளையாடினமையின் கோபாலன், கோவிந்தன்; பாண்டவர்க்குத் தூது நடந்தமையின் பஞ்சவர் தூதன்; அர்ச்சுனனுக்குச் சாரதியாயிருந்தமையின் வலவன், பார்த்தசாரதி; புள்ளரசைக்கொடியிலுடைமையின் உவணகேதனன், கருடக்கொடியோன்; பிரமனை உந்தியினின்று தோற்றுவித்தமையின் உந்தி பூத்தோன்; கமலநாபன்; தலைமயிர் நீண்டுள்ளமையின் கேசவன்; பூதலயப்பிரளயம் வரையில் இறவாத தீர்க்காயுளையுடைமையின் அச்சுதன்; பிரு

இவிதத்துவம் வனா ஜலவடிவ வியாபியாகலின் விஷ்ணு; க்ஷீராப்தியில் சேஷ சயனத்தில் அறிதுயி லமர்ந்தமையின் வேலையிற்றுயின்றோன், அநந்தசயனன்; துளசிப் பத்திர மாலையிற் பிரியமுடைமையின் துளவமாலி; பரம பத்மன வைணவர் கூறும் வைகுண்டத்தைமிடமாகக்கொண்டமையின் வைகுண்ட நாதன்; செந்தாமரை மலர்போலுங் கண்களை யுடைமையின் கமலக் கண்ணன், சலசலோசனன்; பொன்னிற ஆடையை யுடைமையின் பீதாம்பரன்; திருமகளையும் ஸ்ரீவற்சமென்னும் மறுவையும் மார்பிலுடைமையின் திருமறுமார்பன்; கௌஸ்துப மணியை யணிந்துள்ளமையின் கௌஸ்துபாபரணன்; பிரளயங்களில் பிருதிவி தத்துவ உலகினை வயிற்றிலொடுக்கி மீண்டும் வெளிப்படுத்தலின் உலகமுண்டோன்; வில் சங்கு சக்கரம் தண்டு வாள் ஆகிய ஐம்படைகளைத் தாங்கினமையின் பஞ்சாயுதன்; வனத்திலுள்ள பலமலர்களும் இலைத் தளிர்களும் பொருந்திய மாலை யணிந்துள்ளமையின் வனமாலி; உலகினை மூவடியாலளந்தமையின் உலகளந்தவன்; ககுஸ்தன் மரபில் உதித்தமையின் [இராமன்] காகுத்தன்; வயிற்றில் மாலையணியப் பெற்றமையின் தாமோதரன்; இத்தகைய காரணத் திருநாமங்கள் பல வாய்ந்துள்ளவன். திருமால் மனைவிமார் ஸ்ரீதேவி பூதேவி நீளாதேவி முதலியோர். இராமாவதாரத்தில் சீதையும் கிருஷ்ணாவதாரத்தில் இராதா உருக்மிணி சத்தியபாமையு முதலியோர். புதல்வர் பிரமன் மன்மதன். இராமாவதாரத்தில் குசலவர். கிருஷ்ணாவதாரத்தில் சாம்பன் முதலியோர். இவர் முக்கிய வாசஸ்தானம் வைகுண்டம். விகுண்டர் = நாநாமாயையைச் செய்பவர். [திருமால்] விகுண்டர் வசிப்பது வைகுண்டம் எனப்பட்டது. விகுண்டனெனு மொரு அசுரனிருந்த விடமென்றும் அவனைசசங்கரித்துப் பெற்றுக்கொண்டதென்றும் மாறுபடவுரைப்பதுமுண்டு. இவர் பஞ்சாயுதங்களில் வில் சார்ங்கமென்றும், சங்கம் பாஞ்சஜந்யமென்றும், சக்கரம் சுதர்சனமென்றும், கதை கௌமோதகி யென்றும், வாள் நாந்தகமென்றும் பெயர்பெறும்.

இவர் சோமுகாசுரனைச சங்கரிக்க மச்சாவதாரமும், பாற் கடல் கடையக் கூர்மாவதாரமும், இரணியாக்ஷனைச சங்கரித்துப் பூமியை நிலைபெறுத்த வராகாவதாரமும், இரணிய கசிபனைச் சங்கரித்துப் பிரகலாதனை அநுக்கிரகிக்க நரசிங்காவதாரமும், மாபலியின் வன்மையை யடக்க வாமனாவதாரமும், கார்த்தவீரியன் முதற் பல க்ஷத்திரியர்களை இருபத்தொரு தலைமுறை த்வம்சஞ்செய்யப் பரசுராமாவதாரமும், இராவண கும்பகர்ணாதியரை யொழிக்கவும் அநும சுக்கிரீவ விபீஷணாதியர்க் கருள் செய்யவும் தசரத ராமாவதாரமும், பிரலம்பன் முதலானோரை யொழிக்கப் பலராமாவதாரமும், கம்சன் சிசுபாலன் துரியோதனாதியரைத்

தொலைக்கவும் பாண்டவர்க்குத் துணை செய்யவும் கிருஷ்ணாவதாரமும் செய்தவர். கலியுக முடிவில் யாவையு மகற்றக் கற்கி யவதாரமுஞ் செய்வர் - இவற்றின் சம்பந்தமான பெயர்கள் எழுதப்புகின் எல்லையில்லை.

இந்தத் தசாவதாரங்களேயன்றி, சனகன் சனந்தனன் சநாதன் சனற்குமாரன் நாராயணன் கபிலன் இடபன் நாரதன் அயக்கிரீவன் தத்தாத்திரேயன் மோகினி யாகபதி வியாதன் தன்வந்திரி பௌத்தன் எனப்படு பதினைந்தவதாரங்களும் செய்ததாகவும் நூல்கள் கூறும் - இவற்றின் சரிதைகளை அவ்வவ் வரிவடிவிற் காண்க.

நாராயணாக்கியானம் — நாராயண ருஷியால் நாரதருக்குச சொல்லப்பட்ட சுருதிகீதை.

நாராயணாமாத்தியன்—ஒரு தெலுங்க கவி. இவன் ஹம்சவிம்சதியெனும் நூலும், பஞ்ச தந்திரப்பாடலும் தெலுங்கிற்செய்தவன்.

நாராயணி—சப்தமாதரி லொருத்தி. நாராயணன் மனைவி. வாகனம் கருடன் - ஆயுதம் ஆழி.

நாராயணீயம்—வேதாங்கங்கள் ஆறனுளொன்றாகிய சோதிட நூல் வகையுளொன்று. நாராயண முனிவராற் செய்யப்பட்டது.

நாரீகவசன்—இக்ஷ்வாகு மரபினன். அசுமகன்புத்திரன். பரசுராமன் க்ஷத்திரிய த்வம்சஞ் செய்தபொழுது மனைவியைவிடுத்திறந்தவன். அவள் மூலமாக க்ஷத்திரிய வமிசத்திற்கு விருத்தி செய்தமையின் இவனுக்கு மூலக னென்றும் பெயர் வழங்கும்.

நாரீசங்கன்—ஒரு கொக்கரசன். இவனுக்கு இராஜ தர்மனென்றும் நாமாந்தரம்.

நாரீதீர்த்தங்கள்—நந்தை - சௌரபேயி - சமீசி - வஜ்ரை - லதையெனப்படும் ஐந்து அப்சரசுகள் ஓரிருடி சாபத்தால் முதலைகளாகிக் கிடந்து, அங்குற்றோரை விழுங்கிக்கொண்டிருக்கையில் தீர்த்த யாத்திரைமேற் கொண்டு சென்ற அர்ச்சுனன் காலைப்பரிசித்துச சாபநிவிருத்தி பெற்ற சௌபத்திரம் - பௌலோமம் - காரண்டவம் - பிரசன்னம் - பாரத்துவாஜமெனப்படும் ஐந்து தீர்த்தங்கள்.

நாலடியார்—சங்கமருவிய பதினெண் கீழ்க் கணக்கினுள் முதலாவது. பலசைந முனிவர்களாற் செய்யப்பட்டதென்றும், அவர் தொகையால் எண்ணாயிரவ ரென்றுங் கூறுப. இது 401 வெண்பாக்களையுடையது. இதற்குப் பதுமனார் பாலியலதிகாரம் வகுத்துச சிறந்த தோருரையுமியற்றினர்.

நாலாம்பத்து—எட்டுத்தொகை நூலுளொன்றாகிய பதிற்றுப்பத்தில் நான்காவது - இது களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலைக் காப்பியாற்றுக் காப்பியனார் பாடி, நாற்பத்து நூறாயிரம்பொன் பரிசிலும், அவன் ஆளுகையிற் பாகமும் பெற்றது. [புறநா]

நாலை கிழவன் நாகன்—பாண்டியன் போர் வீரரிலொருவன் - கொடையாளி இவனை வடநெடுந்தத்தனார் பாடினர். [புறநா]

நால்வகையோனி—அண்டசம் சுவே

தசம் உற்பீசம் சராயுசம். அவை முட்டையினின்றும், வேர்வையினின்றும், மூளையினின்றும். கருப்பையினின்றும் முறையே தோன்றும் பறவை - புழுக்கள் - செடிகொடிகள் - மனிதர் மிருகங்கள்.

நால்வகை வாய்மை—துக்கம் துக்கநிவாரணம் துக்கோற்பத்தி துக்கநிவாரண மார்க்கம். இவை பௌத்தர்க் குரியன-இதனை, "பிறந்தோருறுவது பெருகிய துன்பம், பிறவாருறுவது பெரும்பேரின்பம், பற்றின் வருவது முன்னது பின்ன, தற்றோ ருறுவ தறிக." [மணி - 2-காதை-64-67 வரிகள்] எனவருவன வற்றானுணர்க.

நால்வர் — சைவ சமயாசாரியாராகிய திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள் திருநாவுக்கரசு சுவாமிகள் சுந்தரமூர்த்தி சுவாமிகள் மாணிக்கவாசக சுவாமிகளாகிய நால்வர் - இவரே சைவசமயத்திற்கு மேன்மை விளங்கப்பல அற்புதங்களை யியற்றித் திராவிட வேதமருளியவர். இவர் பிரபாவங்களை அவ்வவர் சிறப்பு வரிகளிற் காண்க.

நால்வேதம்—இருக்கு யஜுர் சாமம் அதர்வண மெனப்படுவன. இருக்கு வேதத்திற்குப் புவுடிகம் ; யஜுர் வேதத்திற்குத் தைத்திரியம் ; சாம வேதத்திற்குக் (கீதை) கீதம், கௌசிகம் ; அதர்வமெனப்படும் அதர்வண வேதத்திற்கு நான்காம் வேதம், கடைவேத மென்னும் பெயர்களுள. அவ்வேதங்களே கருமகாண்டமான கருமநூலெனவும், ஞானகாண்டமான ஞானநூலெனவுமிருபகுப்புடையன. அவற்றுட் கருமநூலென்பது சுவர்க்க போக முதலியன வளிக்கும் யாக முதலிய கருமங்களை யுணர்த்தும்; ஞானநூலென்பது ஜீவான்மாவானது பரமான்மாவின் தன்மையடையு நெறிக்குரிய வுபாசனை முதலியவற்றை யுணர்த்தும். கருமகாண்டம்—பக்திகாண்ட மென்றும், பூருவ பாகமென்றும், அற்பசுருதியென்றும்; ஞானகாண்டம்—பிரமகாண்டமென்றும், உத்தர பாகமென்றும், பிரபலசுருதியென்றும் பெயர் பெறும். ஞானகாண்டத்திற்கு நிமித்தமாகவுள்ளது கருமகாண்டமாம். ஞானகாண்டத்தை உபநிஷத்து, வேதாந்தம், வேதசிரசு என்று பெரியோர் பேசுப. உபநிஷத்தாகிய ஞானகாண்டம் வேதாந்தமெனப்படும்போது கருமகாண்டம் வேதமெனப்பேசப்படும்.

நாவலந்தீவு—சம்புத்தீவு. இது நாவன் மரமுடைமையின் இப்பெயர் பெற்றது.

நாளாயணி—நளாயணனெனும் இருடியின் புத்திரி - தொழுநோயினனான மௌத்கல்யருஷி மனைவி. இவளியற்பெயர் இந்திரசேனை - இவளே திரௌபதியாகப்பிறந்தாள்.

நாளீகஜங்கன்—நீண்டகாலம் ஜீவித்திருந்த ஒருகொக்கு - இராஜதர்மனென்றும் பெயர் வாய்ந்தது. மத்திய தேசத்திலே கௌதமனெனுமொரு வேதியன் மகன் வேதாத்தியயன முதலிய வைதிக கருமங்களை விடுத்துத் தீயவரோடிணங்குற்று, பொருள் தேடுவதில்

பிரியப்பட்டுப் பல விடங்களிலுழ ன்று ஒருநாள் நாளீக ஜங்கனிடம் வர, நாளீகஜங்கன் தன் நண்ப னொருவனால் பெரும் பொருள் கொடுப்பித்தனன். அந்தப் பொ ருளை யெடுத்துப் போகுமுன் அக் கொடியோன் சிறிதும் யோசியாது புசிக்கக் கருதி நாளீக ஜங்கனைக் கொல்ல, அவன் நண்பனான தைத்தியன் அக்கொடி யோனைக் கொன்றனன். பின்னர் நாளீகஜங் கன் தன் கற்புறு மனைவியால் உயிர் பெற்று அவனையும் எழுப்பி மதிகூறி விடுத்தனன். இவனைப் பற்றிய பிறவிஷயங்களை இந்திரத் துய்ம்னனிற் காண்க.

நாற்கவி ராஜ நம்பி—அகப்பொரு ளதிகாரத்தைத் தனியே சூத்திர ரூபமாகச செய்தவராகிய ஜைனர் இவ்விலக்கணத்திற் கிலக்கியமாக வே தஞ்சை வாணன்கோவை செய்யப் பட்டது.

நான்மணிக் கடிகை—சஙகமருவிய பதினெண் கீழ்க்கணக்கினு ளொ ன்று. இதிலுள்ள வெண்பாக்கள் விதியாகவேனும் விலக்காக வே னும் விளங்கி நன்னான்கு பொருள் களை யடங்கி யுள்ளன. இதனை யியற்றினர் விளம்பிநாகனார். இந் நூற்குசிறந்த பழைய தோருரை யிருக்கின்றது.

## நி

நிகண்டவாதம்—சமண சமயப்பாகு பாடுகளிரண்டனு ளொன்று.

நிகமாச்சுவன்—சிவன்.

நிகுந்தனம்—ஒரு நரகம். குயவன தண்ட சக்கரம்போல் எப்பொழு தும் சுழனறுகொண் டிருந்து பாவிகளுடலைக் கூறுகளாகசசெய் யுஞ் சக்கரங்கள் பொருந்தியது.

நிகும்பலை—இந்திர சித்து யாகஞ் செய்த ஓரிடம்.

நிகும்பன்— (1) சிவகணவீரர்களி லொருவன். (2) இக்ஷ்வாகு மரபில் ஹரியசுவன் மகன் - பரிஹிரு சுவன் அமிதாசுவன் சம்ஹதாசுவ னெனப் பெயருற்ற ஒருவன் பிதா. (3) கும்பகர்ணன் மகன். இவன் அநுமனாற் கொல்லப் பட் டிறந்தவன்.

நிக்கனன்—யதுமரபினன், அநமித் திரன் ஜேஷ்ட புத்திரன். இவன் புத்திரர் சத்திராஜித் பிரசேனன் என்போர்.

நிக்ருந்தனம்—ஒரு நரகம். நிகுந்த னத்திற் காண்க.

நிசகன்—அபிமன்னுவின் ஏழாஞ் சந்ததியினன். இவன் காலத்திலே அஸ்தினபுரி கங்கையாற் கொள் ளப் பட்டமையின், பிற்காலத்தி லே கௌசாம்பி நகரம் இராஜ தானியாக்கப் பட்டது.

நிசாக்ரன்—ஒரு முனிவன். விந்தகிரி யிலே ஆச்சிரமஞ் செய்துகொண்டு வசித்தவன். அங்கே வசித்திருந்த சம்பாதி ஜடாயுவெனும் பக்ஷிகள் சூரியமண்டலத்தைக் காணச் செ ன்று சிறகு தீய்ந்து கீழே விழுந்து அவவாசசிர மததிலேயே வசித் திருந்தன. இந்த ஜடாயுவே சீதை யை அபகரித்துச சென்ற இரா வணனுடன் போர் புரிந்து அவ னாற் சிறகிழந்து விழுந்து கிடந்து அவ்விடயத்தை இராமனுக் குணர் த்தி உயிர் துறந்து இராமனால்

சரம கிரியைகள் செய்யப்பெற்றது. இது தசரதனுக்குத் தோழமை யுடையதென இராமாயணங் கூறுகின்றது.

நிசாசரர் - அசுரர், இராக்கதர்,

நிசாசரி—இராட்சதஸ்திரீ ; இரவில் சஞ்சரிப்போன்.

நிசாபதி—சந்திரன்.

நிசார்த்துனன்—சந்திரன்.

நிசுந்தன்—சுந்தோப சுந்தரைப் பெற்றபிதா

நிசும்பன்—தைத்தியன் - நிசுந்தன் மகன். சுந்தோப சுந்தரிற் காண்க.

நிசுவாசம்—சிவாகமங்கள் இருபத்தெட்டனு ளொன்று - இது சிவபிரான் திருநாபியும், எட்டு உபபேதங்களும், கோடி கிரந்தமுமாக வுள்ளது.

நிண்ணரம்—சூரியன் பரியினொன்று.

நிதலம்—கீழேழுலகினொன்று.

நிதாகரன்—சூரியன்.

நிதிக்கிழவன் } குபேரன்.
நிதிக்கோன் }

நித்தியசுந்தரி—பிரமன்பட்டணம்.

நித்தியசுந்தரேசர்—திருநெடுங்களத்திலே சிவபெருமானுக்கு வழங்குந் திருநாமம்.

நித்திய நாதர்-ஒரு சித்தர்-இரச ரத்நாகரமென்னும் இரசவாதநூலின் ஆசிரியர்.

நித்திய யௌவனை—திரௌபதியின் நாமாந்தரம்.

நித்தியவினோதம் — அருகன் முக்குடையினொன்று.

நிபந்தனகாரர்—சுருதி ஸ்மிருதிகளிற் சொல்லப்பட்ட ஆசார விதிகளைத் திரட்டி நூல்செய்தவர்கள். பராசரமாதவீயம் வைத்தியநாத தீக்ஷீயமுதலியன இத்தகையநூல்கள்.

நிபந்தனகிரந்தம்—பலநூல்களிலிருந்தெடுத்துச்சேர்த்துச் செய்திருக்கிற சாத்திரம்.

நிப்புதி—கேமசரியின் தாய். [சீவக]

நிமி—இக்ஷ்வாகுவின் புதல்வரி லொருவன். விசுவாமித்திரரைக் கொண்டு யாகஞ் செய்வித்துத தன்னையவமதித்ததற்காக வெகுண்ட வசிட்ட முனிவன் சாபத்தால் அங்கஹீனனானவன். விதேக நாட்டு மன்னவன்.

நிமித்திகன்-சச்சந்தன் மந்திரி.[சீவக]

நிம்மவை—புதலையென்னு மூரிலிருந்த வீரசைவமாது. சிவனடியார் வீடுகட்குத் தண்ணீர் கொண்டு போய்க் கொடுத்து, அதனால் வரும் ஊதியத்தினைச சிவனடியவர்க்கு அன்னமிட்டு முத்தியடைந்தவா.

நியக்குரோதன்—யதுமரபினன். கம்சன் தம்பியரி லொருவன்.

நியதி—மேருமகள். விதாதன் மனைவி

நியமம்—அட்டயோகத்தொன்று.

நியாமன்—சிவபிரான்.

நியாயசாஸ்திரம்—கௌதம முனிவனால் வடமொழியிற் செய்யப்பட்ட தொருநூல். பிரத்தியக்ஷமுதலிய பிரமாணங்களைக் கொண்டு பொருளை ஆராய்ந்து நிசசயித்தற் குரியது. இதுவும் கணாத முனிவர் செய்த வைசேடிகமும் தருக்க நூல்கள்.

நியாயபோதினி—தர்க்க சங்கிரகத்தின் வியாக்கியானம். நானூறு கிரந்தங்களை யுடையது. கௌடரும் தர்க்கபாஷாப் பிரகாசஞ் செய்தவருமாகிய கோவர்த்தன மிசிரராற் செய்யப் பட்டது.

ம்ப வழகியார்—சேதுமடாலயத் திருந்த வேளாண்குலத்தவர். சிவ ஞான சித்தியார் திருவருட்பயன் இவற்றிற் குரையும், சேதுபுராண மும் இயற்றியவர். திருவிளையா டற் புராணமியற்றிய பரஞ்சோதி முனிவருக்கு மைத்துனர். வர துங்க ராம பாண்டியன் அதிவீர ராமபாண்டியன் எனுமிவர்கட்குப் போதகாசிரியர்.

நிராகன்—புலத்தியன் மகன். இரு பன் சீஷன்.

நிருதன்— (1) வைவசுவத மநுவின் இரண்டாம் புத்திரன். இக்ஷ்வாரு வின் தம்பி. (2) உசீநரனுக்கு இரண்டாம் புதல்வன்.

நிருதர்—அரக்கர்.

நிருதி—திசைக்காவலரி லொருவன். தென்மேற்றிசைக்காவலன். இவன் மனைவி தீர்க்காதேவி; வாகனம் நரன். நகரம் கிருஷ்ணுங்கனை. ஆயுதம் குந்தம்.

நிருத்தம்—வேதாங்கம் ஆறனுளொ ன்று. இது வேதத்திலுள்ள சொற் களின் ஆராய்ச்சியைக் கூறுவது.

நிருத்தி—தர்க்க சங்கிரக வியாக் கியான நூல். இற்றைக்கு எழுபது வருடங்களுக்கு முன் தமிழ் நாட்டி லிருந்த தெலுங்கராகிய பட்டாபி ராமசாஸ்திரி யென்பாரால் தமது புத்திரியின் பொருட்டு மற்ற வியாக்கியானங்களினும் எளிதிற் புலப்படுமாறு அறுநூறு கிரந்தங் களாகச் செய்யப்பட்டது.

நிர்விருதருஷி — உற்பலாவதியை மிருகமாம்படி சபித்தவர்; உற்பலா வதியிற் காண்க.

நிவாதகவசம்—ஒருசட்டை இது காற் றும் புகாத கவசமெனப் பொருள் படும். காற்றும் நுழையப்பெறாத தெனவே பாணங்களால் ஊறின்றி விளங்குவது எனக் கூறுமேயமை யும். இதனையணிந்தோர் நிவாதகவ சர் எனப்பட்டனர்.

நிவாதகவசர்—பிரகலாதன் மரபினர். தைத்தியரில் ஒரு சாரார். இவ ரைத் தொகையால் முப்பதுகோடி யென்ப. இவர்கள் சமுத்திர மத் தியிலிருந்து கொண்டு தேவர்க ளைத் துன்புசெய்து வந்தனர். ஒரு காலத்தில் இந்திரன் விருப்பின்படி அர்சசுனனாற் சங்கரிக்கப்பட்டிறந் தனர்.

நிஷதம்—(1) ஒருமலை (2) நளசசக் கிரவர்த்தி அரசுபுரிந்த தேசம். இது விந்தகிரிக்கருகே பயோ ஷ்ணி நதி தீரத்தில் உள்ளது.

நிஷதன்—(1) குருவின் நான்காம் புத்திரன் (2) தசரதராமன் மக னை குசன் பௌத்திரன்:

## நீ

நீடசேந்திரன்—கருடன்; பறவை கட்கரசன் என்பதுபொருள்.

நீணெறிநாதர் — திருத்தண்டலை நீ ணெறியிலே சிவபெருமானுக்கு வழங்குந் திருநாமம்.

நீதிநெறிவிளக்கம் — தருமபுர வாதீ னத்துக் குமரகுருபரசுவாமிகளை ஆதரித்துவந்த திருமலைநாயகர் ஒரு நாள் நெடுநேரங்கழித்துப் போஜ னஞ் செய்யாதிருக்கக் கண்டு “வகுத்தான் வகுத்த வகையல் லாற் கோடி - தொகுத்தார்க்குந் துய்த்த லரிது.” என்னுந் திருக் குறளை யெடுத்துக் கூற, அது

கேட்ட திருமலைநாயகர் மகிழ்ந்து திருக்குறளிலுள்ள நீதிகளைச்சுருக்கி விளக்கமான ஒருநூல் செய்து தருகவென வேண்டினமையின் அவ்வாறே செய்தளிக்கப்பட்டதென்ப. இது நூறுவெண்பாக்களையுடையது.

நீபம் — உத்திரட்டாதிநாள்.

நீபன்—பாரன் புத்திரன். இவன் புத்திரர் நூற்றுவர். அவருள் ஜேஷ்டனுன சமரன் காம்பிலி நாட்டரசனுயிருந்தவன்.

நீலகண்டசாஸ்திரியார் —எழுபத்தைந்து வருடங்கட்குள் பல்லாரியிலிருந்த ஒரு தெலுங்கர். இவர் தருக்க சங்கிரக தீபிகைக்கு ஒரு வியாக்கியானஞ்செய்தவர். அது நீலகண்டீய மெனப்படும்.

நீலகண்ட சிவாசாரியார்—வேதாந்த சூத்திரம் பிரமசூத்திரமெனப்படு வியாஸ சூத்திரத்திற்குச சிவாத்துவிதமாகப் பாஷியஞ்செய்தவர். இவர் திருக்கோகரணத்தில் உதித்த தெலுங்கர். இவரும் சங்கராசாரியரும் ஒருகாலத்திலிருந்தவர்களெனத் தெரியவருகிறது. இவராற் செய்யப்பட்டது நீலகண்ட பாஷ்யமென வழங்கும்.

நீலகண்டநாதர்—திரு எருக்கத்தம் புலியூரில் சிவபிரானுக்கு வழங்குந் திருநாமம்.

நீலகண்டம்—ஒருஸ்தலம், இது இமாசலத்தருகே கௌசிகி நதியின் உற்பத்திஸ்தானத்திலுள்ளது.

நீலகண்டன்—சிவபெருமான். பாற்கடல் கடைந்தபொழுது அதிற்றோன்றிய விஷவேகத்தைச் சகிக்க முடியாத தேவர்கள் சிவபிரான்பால் விண்ணப்பிக்க, அதனை வருவித்துண்கையில், சமஸ்தலோகங்களையும் விடமுண்டு காத்ததற்கு அறிகுறியாக அதனைக் கண்டத்திலேயே நிறுத்திவைக்க வேண்டுமெனத் தேவர்கள் விரும்பியவாறு செய்து சீகண்டாதி திருநாமங்களை யேற்றனர்.

நீலகண்டேசர் — திருமண்ணிப்படிக்கரையிலும், திருப்பாச்சிலாச் சிராமத்திலும்சிவபெருமானுக்குவழங்குந் திருநாமம்.

நீலகிரி—(1) இளாவிருத வருஷத்திற்கு வடவெல்லையாக வுள்ள தொருமலை (2) செங்குட்டுவன் வஞ்சிநகரத்திலிருந்து இமயமலைக்குச்செல்லுகையில் ஒருநாள் தங்கியிருந்தது. [சில] இது சேரநாட்டிலுள்ளது.

நீலகேசி, நீலகேசித்திரட்டு } தமிழ்ச சைன நூல். இது சிறுகாப்பியங்கள் ஐந்தனுளொன்று. இது பாயிரம் அவையடக்கமும், சுகதநிர்ணயச் சருக்கம், குண்டலகேசிவாதச் சருக்கம், அர்க்க சந்திரவாதச் சருக்கம், மொக்கல வாதச் சருக்கம், புத்தவாதசசருக்கம், ஆசீவகவாதச்சருக்கம், சாங்கிய வாதச்சருக்கம், வைசேடிக வாதச் சருக்கம், வேதவாதச்சருக்கம், பூதவாதசசருக்கமெனும் பத்துச்சருக்கங்களையு முடையது. வியந்தரமங்கையாகிய நீலகேசியென்பவள் பௌத்த முதலிய மதங்களைக் கண்டித்துச் சைனமதஸ்தாபனஞ் செய்ததாக இயற்றப்பட்டிருத்தலின் இஃதிப் பெயர்பெற்றது. இதன் ஆசிரியர் பெயர் விளங்க

வில்லை. இதற்கு நீலகேசி விருத்தி சமயதிவாகரமென ஒருரையுண்டு.

நீலகேசி விருத்திசமய திவாகரம்—நீலகேசியின்விரிவானவுரை.மணிப்பிரவாள நடையிலுள்ளது. சைன மதத்தினரான சமயதிவாகரரென் பாராலியற்றப்பட்டது [மணிமேகலைக் குறிப்பு]

நீலக்கிரீவன்—சிவன்.

நீலமதி—சீதரனெனு மரசன்புத்திரி. அத்திபதியெனு மரசன் மனைவி. இராகுலனுடையதாய் [மணி]

நீலமலர்க்கண்ணி—திருஎருக்கத்தம் புலியூரில் உமாதேவியாருக்கு வழங்குந்திருநாமம்.

நீலரதன்—அசசுவக்கிரீவன்தம்பி[சூ]

நீலலோகிதன்—(1) உருத்திரபேதங்களிலொருவன் (2) மூவுலகாட்சி வேண்டுமென விசுவாமித்திரனை யாசிக்க, எழுபிறப்பிற்றவஞ்செய்கிறாயா? ஒரு பிறப்பிற்றுன்பனுபவிக்கிறாயா? இவ்விரண்டிலொன்று செய்யின் அங்ஙனமடைவாயென ஒரு பிறப்பிற் றுயரடைகிறேனென்று அரிசசந்திரனைப் பிறந்தவன். இவன் அக்கினி யமிசமென்பது புராணசம்மதம்.

நீலவண்ணன்—(1)சனி,(2) விஷ்ணு.

நீலன்—(1) புதன் மரபில் அஜமீடன் இரண்டாம்புத்திரன். (2) இராஜசூயயாக காலத்திலே சகதேவனோடு யுத்தஞ்செய்தவன். மாகிஷ்மதி புரத்தரசன். அக்கினிதேவன் அங்குற்று இவனது மனைவியனை விரும்பிக் காலம்பார்த்துள்ளதுணர்ந்து அக்கினியைச சிறையிலிட்டு வைத்தவன். அக்கினி அநேக காலஞ் சிறையிலிருந்து மாயையால் ஜ்வாலா ரூபமாய்ப் புறஞ்சென்றனன் [சைவபு] (3) அக்கினிக்குப்பிறந்த வாநரன். இவனை சுக்கிரீவன் சேனை வீரரிலொருவன் (4) செங்குட்டுவனுடைய ஒற்றரில். தலைவன் [சிலப்] [சூ]

நீலாங்கனை—மயூரகண்டன் மனைவி

நீலாசலேசர்—திரு இந்திர நீலபருப்பதத்தில்சிவபெருமானுக்கு வழங்குந் திருநாமம்.

நீலாம்பரிபீடம்—சத்தி பீடங்கள் அறுபத்து நான்கனு ளொன்று. இது நீலபர்வதத்திலுள்ளது.

நீலாம்பிகை—திரு இந்திர நீல பருப்பதத்திலே உமாதேவியாருக்கு வழங்குந் திருநாமம்.

நீலாயதாக்ஷி—திருநாகைக் காரோணத்திலே உமாதேவியார் திருநாமம்.

நீலி—(1) துர்க்கை (2) சங்கமனென்னும் வணிகன் மனைவி. கோவலனைக் கொலையுண்டிறக்கும்படி அவனுடைய முற்பிறப்பிலே சபித்தவள்; [சிலப்] (3) பழையனூர வணிகன் மனைவி; மணஞ்செய்த சிறிது காலத்திலேயே யிறந்து, திருவாலங் காட்டிற் பேயாய்த் திரிந்து, தன்கணவன் அவ்வழி வரு மொருநாள் கள்ளிக்கட்டையைக் குழந்தையாக வமைத்து இடுப்பிலெடுத்துக்கொண்டு அவனையணுக, அவன் பேயென்றுணர்ந்து விரைந்தோட, பேய் 'என்னைக் காட்டில் விட்டுச்செல்வது முறையோ' என்று பின்றொடர்ந்து சென்று அம்பலத்திலிருந்தார் முன் வழக்கைக்கூற, அங்கிருந்த வேளாளர் 'நீயவன் மனைவியென்ற்

குச சாக்ஷியாது' என, "இக்குழந்தையைக் கீழேவிடுத்தால் அது தந்தையை யணைப்பாரும்" என்று குழந்தையைவிட, அது "அப்பா" என்று அவனையணுக, வணிகன் "இது பேய்ச்செயல்" என, அங்கிருந்த வேளாளர் எழுபதின்மர் 'ஆயின் நாங்கள் உனக்குப்பிணை. சிறிதுநேரம் அவ்வறைக்குட் சென்று பேசிவருக' என, அவன் மறுக்கமுடியாது உட்செல்ல; பேயும்பின்றொடர்ந்த கதவையடைத்து அவனைக்கொன்று மறைந்தது; வேளாளர் நெடுநேரங் கழித்துங் கதவு திறக்கப்படாமையின் அதனைத் திறந்து கண்டு வணிகனுக்குப் பிணைபட்டமைக்காகத்தீப்பாய்ந்து சத்தியங்காத்து நற்கதி யடைந்தார்கள். இதனை, "மாறுகொடு பழையனூர் நீலி செய்த வஞ்சனையால் வணிகனுயிரிழப்பத் தாங்கள், கூறியசொல் பிழையாது துணிந்து செந்தீக் குழியிலெழு பதுபேரு முழுகிக் கங்கை, யாறணிசெஞ் சடைத் திருவா லங்காட் டப்ப ரண்டமுற நிமிர்ந்தாடு மடியின் கீழ்மெய்ப், பேறுபெறும் வேளாளர் பெருமையெம்மாற் பிரித்தளவிட் டிவளவெனப் பேச லாமோ" எனும் திருத்தொண்டர் புராண வரலாறெனுஞ் சேக்கிழார் சுவாமிகள் புராணத்து, உமாபதிசிவாசாரியர் திருவாக்கானறிக.

நீறணிந்தோன்—சிவன்; சர்வசம்மாரத்தில் உலகத்தினை நீறாக்கி யாவரும் உஜ்ஜீவிக்கும்படி அந்நீற்றினைத் திருமேனியில் அணிவோன்.

## நு

நுதற்கண்ணன் — சிவபெருமான்; நெற்றியிற் கண்ணையுடையவன்.

நுவலாநுவற்சி—ஓரலங்காரம்.

நுளைசசியர்—நெய்தனிலமகளிர்.

நுளையர்—நெய்தனிலமாக்கள்.

## நூ

நூல்—நாடகத் தமிழ் நூல்களிலொன்று. இது சிலப்பதிகாரவுரையாலறியத்தக்கது. இந்நூல் இறந்துவிட்டது.

நூற்றைம்பது கலி—கடைசசங்கத்தவரியற்றிய நூல்களிலொன்று

நூற்றுவர்—(1) துர்யோதனன் முதலிய கௌரவர் நூற்றுவர் (2) கட்டியங்காரன் புதல்வர் நூற்றுவர் [சீவ]

## நெ

நெஞ்சுவிடுதூது—சித்தாந்த சாத்திரம் பதினான்கனுளொன்று; 258 அடிகளையுடைய கலி வெண்பாவாக ஆன்மா பதியைக்கூடி அநுபவிக்கு முறையை விளக்கி உமாபதி சிவாசாரிய ரியற்றியது.

நெடியோன் குன்றம்—திருவேங்கடமலை; இது தமிழ் வழக்கு நிலத்திற்கு வடவெல்லையாகவுள்ளது

நெடுங்கழுத்துப்பரணர் — புறநானூறு பாடிய புலவர்களிலொருவர்.

நெடுங்கன் மன்றம்—காவிரிப்பூம் பட்டினத்துள்ள ஐவகை மன்றத்தினொன்று. பித்தேறினோர் நஞ்சுண்டோர் அராத்தீண்டப் பெற்றோர் பேய்க்கோட்பட்டோராகிய இத்தகையினர் துன்பையொழிப்பது [சிலப்]

நெடுங்கிள்ளி—கோவூர் கிழாராற்

பாடப்பட்டவன்; ஆலூர் உறையூர் களை யாண்டவன்; சோழன் நலங்கிள்ளி இவற்றை முற்றுகைசெய்த பொழுது கோட்டை வாயிலை யடைத்துக்கொண்டு உள்ளேயிருந்து, கோவூர் கிழாரால் தேற்றப் பெற்றவன். காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளியும் இவனே. [புறநா]

நெடுங்குளம்—ஓரூர். இது பாண்டி நாட்டிலுள்ளது. அக்காலத்தில் மதுரைக்குச செல்லும் வழியிலிருந்தது [சிலப்]

நெடுஞ்சடையன்—ஒரு பாண்டியன். அதிய னென்னுஞ் சிற்றரசனைக் காவிரி வடகரையிலிருக்கும் ஆயிரவேலி அயிரூர் புகழியூர் எனு மிடங்களிற்பொருது வென்றவன்; இது சிலாசாதன பரிசோதகரால் வெளியிடப்பட்ட குறிப்பு.

நெடுஞ்செழியன்—(1) மதுரையிலிருந்த ஒரு பாண்டியன். இவன் ஆராய்ச்சி யின்றிச சிலம்பினிமித்தங் கோவலனைக் கொலைபுரிவித்து கண்ணகிக்கு வழக்கிற் றோற்று, பழியை நினைந்து உயிர்விடுத்தவன். (2) தலையாலங் கானத்துச செருவென்ற நெடுஞ் செழியனெனப் படுவோன்; இவன்முன்னோர் பெருமை மதுரையின் வளம் வனப்பு இவன் வீர முதலியவற்றைக் கூறுவது மதுரைக்காஞ்சி. இவன் பகைமேற் சென்றபோது வருந்திய மனைவிக்கு, பகைவென்று விரைவில் வருவானெனக் கூறியது நெடுநல்வாடை.

நெடுஞ் சேரலாதன் — விடர்ச்சிலை பொறித்த வேந்தனிற்காண்க.

நெடுநல்வாடை—இது பத்துப்பாட்டில் ஏழாவது; இது 188 அடிகளையுடையது; பகைமேற் சென்ற பாண்டியன் நெடுஞ் செழியனைப் பிரிந்து வருந்திய தலைவிக்கு அவ் வருத்தந்தீரும்படி அவன்பகையை வென்று விரைவில் வருவானென்று, கொற்றவையைப் பரவுவாள் கூறியதாக அவனை நக்கீரனார் பாடியது; இதில் ஐப்பசி கார்த்திகைமாதங்களாகிய கூதிர்க் காலத்தினியல்பையும், தனித்திருக்கும் தலைவியினது வருத்த மிகுதியையும் படைவீட்டில் தலைவனிருக்கும் வண்ணத்தையும் விளக்கமாகக் கூறப்பட்டுள.

நெடுந்தொகை நானூறு—கடைச்சங்கப்புலவர்பாடிய நூல்களிலொன்று.

நெடுமாறநாயனர்—பாண்டி மன்னரிலொருவர்; இவர் பிறப்பினால் கூன் பெற்றவர். சமண சமயப் பிரவேசஞ்செய்துள்ள பொழுது இவர் மனைவியாராகிய மங்கையர்க்கரசியாரும் மந்திரியாராகிய குலச்சிறை நாயனரும் அந்தரங்க சிவபக்தராய்த் திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகளை வருவிப்ப, அவர் எழுந்தருளியிருந்த திருமடத்தில் சமணர் தீமூட்ட, 'பையவே சென்று பாண்டியர்க்காகவே' எனத் தேவாரமோதச் சுரப்பிணியுற்று வருந்தி, சுவாமிகள் அருமைத் திருக்கரத்தால் திருவெண்ணீறிடப்பெற்றுச் சுரப்பிணியும் பிறவிக்கூனும் நீங்கியவர். அறுபான்மும்மை நாயன்மாரிலொருவர். திருநெல்வேலியில் போர் செய்து வென்றவர். "நிறைகொண்ட சிந்தையா னெல்வேலி

வென்ற நின்றசீர் நெடுமாற னடியார்க்கு மடியேன்" எனச்சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் றுதிசெய்யப் பெற்றவர்.

நெடுமுடிக்கிள்ளி—சோழர் குலத்தரசரி லொருவன். இவன் தன்முன்னோர், தொன்றுதொட்டு நடத்திவந்த இந்திரவிழாவை நடத்தாதொழிந்தவன். இது காரணமாகக் காவிரிப்பூம் பட்டினம் கடலாற் கொள்ளப்பட்டது. காரியாற்றிற் போர்செய்து, சேர பாண்டியர்களை வென்றவன்; கிள்ளிவளவன், 'மாவண்கிள்ளி, வடிவேற் கிள்ளி, வென்வேற்கிள்ளி யெனவும்பெயர் பெறுவன் [மணி]

நெடும்பல்லியத்தனார் — பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடிய புலவர்களி லொருவன் [புறநா]

நெடுவேளாதன் — குன்றூர் கிழார் மகனாற் பாடப்பெற்றவன் [புறநா]

நெடுவேள்குன்றம்— திருச்செங்குன்றாவெனும் மலை; இது சேரநாட்டிலுள்ளது.

நெட்டிமையார்—பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பாடிய புலவர்களிலொருவர்; இவர் பாட்டிற் பஃறுளியாறு வடிம்பலம்ப நின்ற பாண்டியனாற் செய்யப்பட்டதென்பூர் [புறநா]

நெய்க்குறி—தேரையர் செய்த வைத்திய நூல்களிலொன்று; இது மூத்திர பரீக்ஷையைக் கூறும்.

நெய்தல்—ஐந்நிலத் தொன்று; அது கடலும் கடல்சார்ந்த விடமும், கழியுங் கழிக்கரையுமாம்.

நெய்தற்றலைவன்—வருணன்.

நெய்தனிலத்தலைவன்—சேர்ப்பன்

நெய்தனிலத்தியாழ்—விளரி.

நெய்தனிலத்தூர்—பாக்கம்.

நெய்தனிலப்பறை—பம்பை.

நெய்யுண்டாழ்வான்—வைஷ்ணவ சிங்காசனாதிபதிகள் எழுபத்து நால்வரிலொருவர்.

## நே

நேசநாயனார்-காம்பீலியென்னுந் திருப்பதியில்வாழ்கின்ற சாலியர்குலத்தில் திருவவதாரஞ்செய்து நேசநாயனா ரென்கிற திருநாமமும் மிகுந்த சிவநேசமும்கொண்டு, பரமசிவத்தினுடைய திருவடியைமறவாத சிந்தையுடன் வாக்கினால்பஞ்சாக்ஷரத்தை ஓதுகின்ற செய்கையுடையவராகி நல்ல உடையும் கீளுங் கோவணமும்நெய்து சிவனடியார்களுக்கு வேண்டியவாறு நாடோறுங்கொடுத்து அவர்களுடையபாதங்களைப் பணிந்து தொண்டு செய்யும் நியமத்தில் வழுவாதிருந்து முத்தியடைந்தனர். இல்லறத்திலிருந்தபடி சிவனடியார்களுக்குத் தொண்டுசெய்து முத்திபெற்றவர். சிவபக்தர்களாகிய அறுபான்மும்மைநாயன்மார்களி லொருவர்.

நேமி—ஜைனமதஸ்தாபகரான இருபத்து நான்கு தீர்த்தங்கரரில் இருபத்திரண்டாவது தீர்த்தங்கரர்.

நேமிநாதம்—தொண்டை நாட்டில் களத்தூரிற் பிறந்த குணவீர பண்டித ரெனும் ஆருகதராற் செய்யப்பட்ட தொண்ணூற்றாறு வெண்பாக்களாலாய எழுத்துஞ்சொல்லுமாகிய பகுதிகளையுடையதொரு தமிழிலக்கண நூல்.

நேமியான்—திருமால்; சக்கிரத்தை யுடையவன்.

நேரிவாயில்—உறையூரின் தெற்கு வாயிலிலுள்ள தோரூர். இதில் தன் மைத்துனனுக்குப் பகைவராகிய ஒன்பது மன்னர்களைச் செங்குட்டுவன் போர்செய்துவென்றான் [சில]

நேர்வான்—சித்திரைநாள்.

## நை

நைமிசம்—ஒருவனம். இது பல முனிவர்கள் பிரமனை யடுத்துத் தவஞ்செய்தற்குரிய விடம் யாதென வினவ, அவன் தருப்பைப் புல்லினைச் சக்கிரமாக வளைத்து விடுத்து இது நின்றவிடமாமென, முனிவர் அதனபின்சென்று அது தங்கிய விடத்தேயிருந்து தவஞ் செய்தனர். நேமி=சக்கிரம். நேமி சம்பந்தம் நைமிசமெனப்பட்டது.

நைமிசாரணியம்—ஒரு விஷ்ணு ஸ்தலம்; இது வடநாட்டிலுள்ளது.

நையாயிகர்—சித்துஞ் சடமுமாகிய இரண்டுமே நித்தியப் பொருள்களெனும் கௌதம கணாத மத வாதிகள்.

நைரஞ்சாரநதி—பல்குனிநதி; புத்தகயைக் கருகேயுள்ளது [மணி]

நைருதி—நிருதியிற்காணக.

நைஷதம்—(1) ஒருமலை (2) நிஷத தேசத்துச்சரிதையைக் கூறுநூல். வடமொழியில் ஸ்ரீஹர்ஷகவியாலும், தென்மொழியில் அதிவீரராமபாண்டியனாலுஞ் செய்யப்பட்டது. இதன் மொழி பெயர்ப்பை மிகச் சிறந்ததென்பர். நைஷதம் புலவர்க் கௌஷதமென்பது பழமொழி.

## நொ

நொச்சி—ஒரு பிரபந்தம். அது மாற்றார்க் கெதிரூன்றி நொச்சிப்பூமாலைசூடித் தம் மதில் காக்குந் திறங்கூறுவது. மாற்றார்க் கெதிரூன்றித் தம் மதில் காப்போர்க்கு மாலை நொச்சியெனப்படும்." [புறப்பொருள் வெண்பா மாலை.]

நொச்சி நியமங்கிழார்—புறநானூறு பாடிய புலவரிலொருவர்; இவர் வேளாளர். [வன்.

நொய்யைப்புசிப்பவன்—கணாத முனி

## நோ

நோயணுகாவிதி—ஒருவைத்தியநூல் இது தேரையராற்செய்யப்பட்டது.

நோய்முகன்—சனி.

## ப

பஃறுளி—வடிம்பலம்ப நின்ற பாண்டியனா லுண்டாக்கப் பட்டதோராறு. "இது குமரியாற்றிற்குத் தெற்கேயுள்ளது. இது தலைச்சங்கமிருந்த நாளில் கவியரங்கேறினார் எழுவர் பாண்டியருள், ஒருவன் சயமா கீர்த்தியானகிய நிலந்தரு திருவிற்பாண்டியன் தொல்காப்பியம் புலம்படுத்திரீஇயகாலத்தில், அவர் நாட்டுத் தென்பாலி முகத்திற்கு வடவெல்லையாகிய இவ்யாற்றுக்கும், குமரியென்னும் யாற்றிற்கும இடையே எழுநூற்றுக் காவதவாறும், இவற்றின்நீர்மலிவானென வமைந்த ஏழ்தெங்க நாடும், ஏழ் மதுரைநாடும், ஏழ் முன்பாலை நாடும், ஏழ் பின்பாலை நாடும், ஏழ் குன்றநாடும், ஏழ்குணகாரை

நாடும், ஏழ்குறும்பனை நாடுமென்னும் இந்த நாற்பத்தொன்பது நாடும், குமரி கொல்ல முதலிய பன்மலை நாடுங் காடும் நதியும் பதியும் தடநீர்க்குமரி வடபெருங் கோட்டின் காறும் கடல் கொண்டழிந்தபோது தலைசசங்கமிருந்த தென்மதுரையும் அவற்றோடழிந்தது" எனசசிலப்பதிகார வுரையானுணரப்படும்.

பகதத்தன்—நரகாசுரன்மகன்.

பகவற்கீதை—கிருஷ்ண மூர்த்தி அர்ச்சுனனுக் குபதேசித்த யோக சாஸ்திரம். இது பாரதயுத்தகாலத்தில், அர்சசுனன் இருபக்கத்தவர் சைநியங்களிலும் விளங்கிய பந்துக்களையும் சகோதரர்களையும் ஆசிரியர் முதலானோரையும் பார்த்துக் கருணாரூபமாய் மிக்க விரகதியடைந்து வில்லையும் அம்பையும் எறிந்துவிட்டுப் போர்புரிய விரும்பாதிருக்கக் கண்ட கிருஷ்ண மூர்த்தி அர்சசுனனை நோக்கிசசுயதர்ம பரிபாலனஞ் செய்வது தோஷமாகாது என்று போதித்து, தத்துவ ஞானோபதேசஞ் செய்து தேற்றினர். அவவுபதேச வாக்கியங்களே பகவற்கீதை யெனப்படும். அவவுபதேசத்தால் ஆத்மாவுக்குப் பாத்திய பாதகத்துவங்களில்லை யென்பதை அர்சசுனனுணர்ந்து, கிருபா சோகங்களுக்கு மூலங்களான அகங்கார மமகாரங்களை விடுத்து ஈணேத்சாகத்திற்குக் காரணமான சுயதர்மத்தை விடாமல் அவலம்பித்தனன். இந்நூலுக்கு அத்துவிதபாஷியம் சங்கராசாரியராலும், சைவபாஷியம் நீலகண்ட சிவாசாரியராலும், விசிஷ்டாத்வைத பாஷியம் இராமாநுஜாசாரியராலும், துவைத வைணவ பாஷியம் மத்துவாசாரியராலுஞ் செய்யப்பட்டுள. இது பாரதத்திற்சேர்ந்துள்ள நூலென்றும், அன்று; பிறராற்செய்து இடையே சேர்க்கப்பட்டதென்றும், மாறுபடக்கூறுவாருமுளர். இந்நூல் ஐரோப்பிய பண்டிதர்களாலும், ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டு வழங்குகிறது.

பகழிக்கூத்தர்—ஒரு செஙகுந்தப்புலவர். திருசசெந்தூர் முருகன் பிள்ளைத்தமிழ் முதலியன இயற்றியவர். விசேடித்த கல்வியும் பக்தியுமுடையவரெனத்தெரியவருகிறது.

பகன்—(1) துவாதசாதித்தரிலொருவன்; தக்ஷயாக த்வம்சத்தில் வீரபத்திரக் கடவுளால் கண்ணைப் பறிக்கப்பட்டவன் (2) பிருந்தாவனத்தில் கம்சன் கட்டளையால் கண்ணனைக் கொல்ல முயன்று, கண்ணனாற் கொல்லப்பட்டிறந்தவன். இவன் கொக்கு வடிவினனை இராக்ஷதன் - (3) ஏகசக்கிரபுரத்தி லிருந்த வேதியருக்குத் துன்பு செய்துவந்த ஒரு ராக்ஷஸன்; அவவேதியர் நியமனப்படி நாளொன்றுக்கு ஒரு வண்டி சாதமும் இரண்டு எருமையும் ஒரு அந்தணச சிறுவனேடும் அவனுக்கு இரையாகக் கொடுத்து வருகையில், அக்கிரகாரத்தில் பாண்டவர் தங்கியிருந்த வீட்டுக்காரன் முறைவர, வீமனே அவவுணவாதிகளைக் கொண்டு சென்று அவவுணவைப் புசித்து அவனோடு மற்போர் புரி

சு கொன்றெழித்தனன். பத்தாயிர யானை பலமுள்ள எழு சமவீரரிலொருவன். (4) யது மரபிற் கஙகன் மூத்தகுமாரன்.

பகீரதன்—இக்ஷுவாகு மரபினன்; திலீபன் புத்திரன்; இவன் சகரன் புதல்வரும் தன் பாட்டன்மாருமாகிய அறுபதினுயிரவர் கபிலர சாபத்தால், கதியடையாது பாதலத்திற் சாம்பராய்க் கிடப்பதுணர்ந்து ஆகாய கஙகையை நோக்கிக் கடுந்தவஞ்செய்து, கஙகையைத தரிசிதது, கஙகையின் வேகத்தைத் தாஙகும்படி சிவபிரானை நோக்கித் தவஞ்செய்து அவவிறைவனருள் பெற்று, கஙகையை வருவிக்கையில் சிவபிரான் சடையிற்கங்கையடஙகிவிட, மீண்டுஞ் சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்து சிறிது பூமியில் வரப்பெற்றுப் பாதலத்திலிருந்த பிதிரர் என்பினை நனைப்பித்து முத்தியிற் கூட்டியவன். இவனுற் கொண்டு வரப்பட்ட காரணத்தால் கஙகை பாகீரதி எனப்பெற்றது. இவன் கஙகையைக் கொணர்ந்த அருமையைக் கருதிப் “ பகீரதப்பிரயத்தினம் ” எனவும் வழஙகலாயிற்று.

பகுகவன்—புதன் மரபில் சுத்யுவன் புத்திரன். இவன் பகுகந்தனென்றுஞ் சொல்லப்படுவன்.

பகுசுருதியாகமம்—ஜைனகம மூன்றனுளொன்று [மணி]

பகுரதன்—புரஞ்சயன் மகன்.

பகுளாசுவன்—கண்ணனுல் முத்தி பெற்றவன்.

பகுளை—உத்தானபாதன் மகனை உத்தமனுடைய மனைவி.

பக்குடுக்கை நன்கணியார் — புறநானூறு பாடிய புலவரிலொருவர்.

பக்ஷீஸ்வரமுனிவன் — க்ஷீராப்தி முனிவன் [கருடனுயிருக்க வேண்டும்.] இவன் சுதன்மனெனும் அரசனிடஞ் சென்று ஓரழகிய பெண் வேண்டுமென, அவன் தனக்குப் பதின்மூன்றுபுத்திரிகளிருப்பினும் பக்ஷிரூபத்திற்காக வேண்டாமெனிற் சபிப்ப னென்றுகருதி, என் புத்திரிகளில் உம்மை விரும்பியவளைக் கொடுப்பேனென, இவன் திவ்விய ரூபத்துடன் அந்தப்புரஞ் சென்று யாவரையும் மோகிப்பித்து மணம் புரிந்தவன் [சைவபு]

பஙகயசெல்வி — திருமழிசையாழ்வாரை வளர்த்த திருவாளனென னுப் பிரம்பறப்பான் மனைவி.

பஙகாசுவன்—நூறு புத்திரர்களையும் நூறு புத்திரிகளையும் பெற்ற ஓரரசன் - இவன் இந்திரன்பாற் பெற்ற வரத்தினல் பெண்வடிவங்கொண்டவன்

பசுபதி—(1) சிவன் (2) அஷ்டமூர்த்திகளிலொருவர்.

பசுபதிநாயகி—திருப்பாசூரில் உமாதேவியார் திருநாமம்.

பசுபதிநாயகேசர்—திருசசக்கரப்பளளியில் சிவபிரானுக்கு வழஙகுந் திருநாமம்.

பசுபதிநாயனர்—வெய்யலூரிலிருந்த ஒருவீரசைவர். ஆகமம் வாசித்து வருவதைக் கேட்டுக் கொண்டிருந்து, அதிலே சிவபெருமான் விஷபானஞ் செய்தாரெனச சொல்லக் கேட்டு, மூர்ச்சித்துக் கீழேவிழ, சிவபெருமான் இடபாரூடராய்க் காக்ஷியளித்து . அஞ்சாதே யென

வுங் கேளாது, விஷத்தையுமிழ்க்கவென, பெருமான் "அதனையுமிழ்ந்தால் உலகமழியும்" என்று திருவாய்மலர்ந்து திருமடியிலிருத்திக் கொள்ளப்பட்டவர் [வசவபு]

பசுபதீசர்—(1) திரு ஆவூர் (2) திருக்கருவூர் (3) திருப்பந்தணைநல்லூர் இக்கக்ஷேத்திரங்களிலே சிவபெருமானுக்குற்ற திருநாமம்.

பஜமானன்—(1) சாத்துவதன்மகன் (2) அந்தகன் ஜேஷ்டபுத்திரன், இவர் இருவரும் யதுமரபினர்.

பஜி—யதுமரபிற் சாத்து வதன் புத திரரிலொருவன்.

பஞ்சகௌடர்—சாரஸ்வதம் கன்னியாகுப்ஜம் மிதிலம் கௌடம் உத்கல மென்னும் இவவைந்து தேசத்துப் பிராமணர்கள்.

பஞ்சசபை—ஐந்து சபைகள்; இவை திருவாலங்காடு சிதம்பரம் மதுரை திருநெல்வேலி திருக்குற்றாலமெனும்பஞ்சக்ஷேத்திரங்களில் நடராசப்பெருமான் நடித்தருளிய இரத்தினசபை பொற்சபை வெள்ளிசபை தாமிரசபை சித்திரசபைகள் இவ்விடயத்தை "குடதிசை யதனின் மருவுகுற் றாலங் கோதறு சித்திர சபையாங், குற்றமில்குணக்கிற் பழையனூர் மற்றங் குலநவரத்தினமன் றென்பர், அடல்விடைப் பாக னெல்லையம் பதியிலம்பலந் தாமிர சபையாம், ஆலவாய் மதுரை வெள்ளியம் பலமேயணிதில்லை செம்பொனம் பலமே" எனவரும் இரட்டையர் தில்லைக் கலம்பகச செய்யுளானறிக.

பஞ்சசாயகன்—மன்மதன். ஐந்துமலர்ப்பாணங்களையுடையவன்; பஞ்சபாணத்திற்காண்க.

பஞ்சசிகன்—மிதிலை மன்னனாகிய ஜனகனுக்கு ஞானோபதேசம்புரிந்தவன்.

பஞ்சசீலம்—கொல்லாமை கள்ளுண்ணாமை பொய்யாமை காமமின்மை கள்ளாமை. இதுபௌத்தர்கட்கு முண்டு

பஞ்சசூடை—நாரதருக்கு மாதரியற்கை இத்தகைத்தெனநன்கு விளக்கிய ஓரப்சரசு.

பஞ்சஜனன்—(1) திதிமரபிற் சம்ஹலாதன் புத்திரன் (2) அவந்தியிலே கண்ணன் பலராமனுடன் வித்யாப்பியாசஞ் செய்த குருவாகிய சாந்தீபருக்குக் குருகாணிக்கையாக யாதுவேண்டு மெனக்கேட்டபொழுது, அவர்தம் மனைவியிடம் யோசித்து, பிரபாச தீர்த்தத்திலே சின்னாண்முன்னே முதலையாற்கொள்ளப்பெற்ற தம் புதல்வனையுயிர்ப்பித்துத்தருகவென, கண்ணன் தன் அண்ணனுடன் தேரேறிக்கடலிற் சென்று கலக்கி அங்கே பஞ்சஜனன் விழுங்கினமையின் அவனைக் கொன்று பிள்ளையை யுயிர்ப்பித்துக் கொடுத்தனன். இப்பஞ்சஜனன் கழுத்தெலும்பே பாஞ்சஜன்யமெனனும் விஷ்ணுவின்சங்கமெனப்படும்.

பஞ்சதிராவிடர்—தெலுங்கர் திராவிடர் கன்னடர் மகாராஷ்டிரர் கூர்சரரென்னும் இவ்வைந்து பாஷையாளருமே பஞ்சதிராவிடர்.

பஞ்சபாணங்கள்—மன்மதன் கரும்புவில்லிற் றொடுத்துக் காமமூட்டவெய்யும் ஐந்து மலர்க்கணைகள்; அவை: தாமரை மா அசோகு

முல்லை நீலோற்பலம். அவை முறையே, சுப்பிரயோகம் விப்பிர யோகம் சோகம் மோகம் மரண மெனும் அவத்தைகளைச் செய்யும். இதனை, "வனசஞ் சூத மசோகு முல்லை, நீலமெனமதன் பெய்கணை யைந்தே", "சுப்பிர யோகம் விப் பிர யோகம், சோகம் மோகம் மர ணமுந் தோற்றும், அவைதாம், சுப்பிர யோகஞ்சொல்லு நினைவும், விப்பிர யோகம் வெய்துயிர்த் திரங் கல், சோகம் வெதுப்புந் துய்ப்பன தெவிட்டலும், மோக மழுங்கலும் மொழிபல பிதற்றலும், மரண மயர்ப்பும் மயக்கமுஞ் செய்யும்"— எனவருவதனாலறிக. அப்பாணங் களை "நெஞ்சி லரவிந்த நீள்சூதங் கொங்கையினில், துஞ்சும் விழியி லசோகமாம்—வஞ்சியர்தஞ், சென் னியிலே முல்லை திகழ்நீல மல் குலிலே, யென்னவே னெய்யுமி யல் பாம்." இம்முறையாக வெய்வ னென நூல்கள் கூறும்.

பஞ்சபாண்டவர்—பாண்டு மன்னனு டைய ஐம்புதல்வர். பாண்டு தன் மனைவியைப் புணரப்படா தென் றும், தவறிப்புணர்ந்தால் உடனே யிறப்பானென்றும் சாபம் வந்தமை யால், பாண்டு வருந்தி நிற்கையில், அவன் மனைவி குந்தி, தான் இள மைப்பருவத்தே துர்வாசமுனிவ ருக்குப் பணிபுரிந்து அவரருளால் யமன் வாயு இந்திரன் அசுவினி தேவர் இவர்கள் திருவருளால் சந் ததியுண்டு செய்து கொள்ள வரம் பெற்றுள்ளதை யுணர்த்தி அவ னைக்களிப்பித்து, அவன் விருப் பேற்று, இயமனால் தருமனையும், வாயுவால் பீமனையும், இந்திரனால் அர்ச்சுனனையும் தான்பெற்று, அசு வினி தேவர் மந்திரத்தைத் தன் இளையாளாகிய மாத்திரா தேவிக் குபதேசித்து அவளிடம் நகுல சக தேவர்களையும் பெற்றனள். இவர் களே பஞ்சபாண்டவர்கள். இவர் களுக்கு மூத்தோனாகிய கர்ணன் குந்தியிடம் சூரியனருளால் அவ ளது கன்னிப்பருவத்திலேயே உதி த்தவன். அவன் ஜேஷ்டனென்ப தைப்பாண்டவர்கள் அறியார்கள்.

பஞ்சபாரதீயம்—நாரதன் செய்ததோ ரிசைத் தமிழ்நூல். இஃதிறந்த தென்றூர் அடியார்க்கு நல்லார்.

பஞ்சமரபு—அறிவனார்செய்த இசைத் தமிழ் நூல்களிலொன்று. இது சிலப்பதிகாரத்திலே மேற்கோள் காட்டப்பட்டுளது.

• பஞ்சலிங்கம்—பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயமெனப்படும் பஞ்ச பூதங்களால் தனித்தனி ஆக்கப் பட்டு விளங்குஞ் சிவலிங்கங்கள். இவை முறையே காஞ்சி திருவா னைக்கா திருவண்ணாமலை சீகாள த்தி சிதம்பரமென்னும் க்ஷேத் திரங்களிலுள. இதனை, "கடல் விட நுகர்ந்த காசினி லிங்கா காஞ்சிமா நகருறை லிங்கம் - கா விரி வடபால் வருதிரு வானைக் காவினி லப்புலிங் கமதாம், வட திசை யண்ணா மலையினி லிங்கம் வன்னியின் வடிவுகா ளத்தி - வாயு லிங் கமதாஞ் சிதம்பர லிங்க மாசி லா காயலிங் கமதாம்" எனவரும் இரட்டைப்புலவர் வாக்கானறிக.

பஞ்சவடி—இராமன் வனவாசஞ்செய் கையில், கோதாவிரி தீரத்தில் ஆசி

ரமம் அமைத்துக் கொண்டிருந்த விடம். ஐந்து ஆலமரங்கள் கூடி நிற்கும். இராவணன் சீதையை அபகரித்துச் சென்றனன்.

பஞ்சவர்—சந்திர ஆதித்திய கிரக நக்ஷத்திர தாரகைகள். இவர்களை ஜ்யோதிஷ்க ரென்பர் [சீவக]

பஞ்சவின நாதர் — திருமுக்கீசரத் திற் சிவபெருமானுக்கு வழங்குந் திருநாமம்.

பஞ்சவிம்சதி மூர்த்தங்கள்—இருபத் தைந்து சிவமூர்த்தங்கள். அவை லிங்கம் - சுகாசனம் - உமேசம் - கலியாணசுந்தரம் - அர்த்தநாரீசுவரம் - சோமாஸ்கந்தம் - சக்கிரப் பிரதானம் - திரிமூர்த்தம் - கேசவார்த்தம்-தக்ஷிணாமூர்த்தம்-பிக்ஷாடனம் - கங்காளம் - காமசம்மாரம் - காலாரி - ஜலந்தராரி - திரிபுரசம்மாரம் - சரபம்-நீலகண்டம்-திரிபாதம் - ஏகபாதம் - வைரவம்-ருஷபாரூடம் - சந்திரசேகரம் - நடராஜம் - கங்காதர மெனப்படு மூர்த்தங்கள். இவை அஷ்டாஷ்ட மூர்த்தங்களெனப்படு சிவமூர்த் தங்களி லடங்கியன. சிவபராக்கிரமத்திற்காண்க.

பஞ்சாசிரியர்—இயலாசிரியன் - ஆடலாசிரியன் - யாழாசிரியன் - இசையாசிரியன் - குழலோன் அல்லது தண்ணுமையோன். இவர் பரத நூலாசிரியர்கள்.

பஞ்சாப்சரசம்—ஒருகுளம். இது தண்டகாரணியத்திலே மந்தகர்ணனாற் செய்யப்பட்டது.

பஞ்சினுமெல்லடியம்மை—திருவாரூரில் மகாதேவியாருக்கு வழங்குந் திருநாமம்.

படிக்காசுப்புலவர்—இவர் தொண்டைமண்டலத்திலே, பொற்களத்தூரிலே யவதரித்து, சிவாநுக்கிரகத்தால் தமிழ்க்கலை முழுதும் பயின்று, தெய்வீகம் விளங்கிய நல்வாக்கினைப்பெற்று, இல்லறவாழ்க்கையிலே இருக்கு நாளில், அந்நாட்டிலுள்ள வல்ல நகரத்தையடைந்து, காளத்திபூபதி யென்பவனைக்கண்டு, "பெற்றா ளொரு பிள்ளை யென்மனை யாட்டியப் பிள்ளைக்குப்பால், பற்றாது கஞ்சிகுடிக் குந் தரமல்ல பாவிரக்கச, சிற்றாளு மில்லையிங் கெல்லா வருத்தமுந் தீரவொரு, கற்றா தரவல்லை யாவல்ல மாநகர்க் காளத்தியே." என்னுஞ் செய்யுளைப்பாடி அவனால். சில பாற்பசு வளிக்கப்பெற்றனர். அன்றியும், மாவண்டூரிலே மிக்க பிரபுவாயிருந்த கஸ்தூரிமுதலியார் குமாரராகிய கறுப்ப முதலியா ரென்னும் ஒருவேளாளர் வேண்டு கோளின்படி, தொண்டைமண்டல சதகமென்னும் ஒரு பிரபந்ததைப்பாடி, அரங்கேற்றி, அவரால் வேண்டிய திரவியங்கள் அளிக்கப்பெற்றமையேயன்றி, பல்லக்குஞ் சுமக்கப்பெற்று அவருவகைமே லீட்டினால், "காவை வென் றிடுகத் தூரி கண்மணிக் கறுப்ப னென்னு, மாவையம் பதியான் றொண்டை மண்டல சதகங் கேட்டு, நாவலர் புகழ்ந்து மெச்ச நவநிதி பொழிந்து நன்றாப், பூவுல கெங்கும் போற்றப் புகழ்நிலை நிறுத்தினனே" எனவும், "ஓர்கறுப்பு மில்லாத தொண்டைவள நன்னாட்டி லுசித வேளாள,

சீர்கறுப்பெனன் றில்லாத கத்தூரி மன்னனருள் சேயைப் பார்மேல், வார்கறுப்ப னென்று சொல்லி யழைத்தாலு நாமவனை யன்பி னாலே, பேர்கறுப்ப னிறஞ்சிவப்பன் கீர்த்தியினால் வெளுப்பனெனப் பேசு வோமே” எனவும், “எல்லப்ப னம்மையப்பன் றருதிருவேங் கடநாத னெழிற்சீ ராமன், வல்லக்கொண் டையன்மாதை வேங்கடே சுரன்போல வரிசை செய்தே, செல்வத்தம் பியருடனே கத்தூரி மகன்கறுப்பன் றெருவீ திக்கே, பல்லக்குத் தான் சுமந்தா னதுநமக்கோ ராயிரம்பொன் பரிசு தானே.” எனவும் வழங்குஞ் செய்யுண் முதலியவற்றாற்புகழ்ந்துமகிழ்ந்திருந்தனர்.

பின்பு, தென்னாட்டையடைந்து இராகுநாத சேதுபதியைக் கண்டு, “மூவேந் தருமற்றுச் சங்கமும் போய்ப்பதின் மூன்றொருடிரு, கோவேந் தருமற்று மற்றொரு வேந்தன் கொடையு மற்றுப், பாவேந்தர் காற்றி லிலவம் பஞ்சாகப் பறக்கையிலே, தேவேந்த்ர தாருவொத் தாய்ரகு நாத செயதுங்கனே.” என்னுஞ் செய்யுளைப்பாடி சில பரிசுபெற்று, பல்லக்கு முதலிய விருதுகளுடன் மதுரையையடைந்தபொழுது, அந்நாட்டை யாண்டிருந்த திருமலைநாயகர் இவரது ஆரவாரத்தை நோக்கிக்கிளிக்கூட்டுச் சிறையிலே அடைத்துவைக்க, அத்தருணத்து, “நாட்டிற் சிறந்த திருமலை யாதுங்க காசரிகா, காட்டில் வனத்திற் பிரிந்துழ லாமற் கலைத்தமிழ்தேர், நாட்டிற் சிறந்த படிக்காச னென்னுமோர் பைங்கிளியைக், கூட்டி லடைத்துவைத் தாயினி யாரென்று கூப்பிடுதே.” என்னுஞ்செய்யுளைப்பாடி, அவனை வசப்படுத்தி, பரிசுபெற்றுத் தங்கியிருந்தனர்.

அதன்பின்பு, காயற்பட்டணத்தை யடைந்து, “காய்ந்து சிவந்தது சூரிய காந்தி கலவியிலே, தோய்ந்து சிவந்தது மின்னார் நெடுங்கண்க டொல்பலநால், ஆய்ந்து சிவந்தது பாவாணர் நெஞ்சமனுதினமும், ஈந்து சிவந்தது மால்சீதக் காதி யிருகரமே.” எனவும், “தேட்டாளன் காயற் றுறைசீதக் காதி சிறந்தவசர, நாட்டான் புகழ்க்கம்ப நாட்டிவைத் தான் புகழ்நாவலரை, ஒட்டாண்டியாக்கி யவர்கடம் வாயி லொருபிடிமண், போட்டா னவனு மொளித்தான் சமாதிக் குழிபுகுந்தே.” எனவும் வழங்குஞ் செய்யுண் முதலியவற்றால், சீதக்காதியைப்புகழ்ந்து, மிக வுயர்ந்த வைர மோதிர முதலிய பரிசுபெற்று, திருச்செந்தூரையடைந்து, முருகக்கடவுளைத் தரிசித்து, “முற்கனை யப்பனை யேறவிட் டாட்கொண் முதல்வருள்ளக், கற்களைக் கும்படி போதித் திடுகருணைக்கடலைச், சிற்பரைக் குட்டியை யெங்கெங்குந் தித்திக்குந் செங்கரும்பின், சர்க்கரைக் கட்டியைக் கண்டேன்செந் தூரொனுந் தானத்திலே.” என்பது முதலிய செய்யுட்களாற்றுதித்து, மற்றுந் தலங்களை வணங்கி, புள்ளிருக்குவேளூரையடைந்து, வைத்தீசுரரையும், தையல்நாயகியம்மையை-

யுந் தரிசித்து, அங்குள்ள அன்பர்கள் வேண்டுகோளின்படி ஒருகலம்பகத்தையருளிச் செய்து சந்நிதியிலரங்கேற்றி வசித்திருந்தனர்.

சின்னாட் சென்றபின் திருவாவடுதுறையை யடைந்து துறவு பூண்டு சிதம்பரத்தையடைந்து, சபாநாயகரையும் சிவகாமியம்மையையுந் தரிசித்து, "பொல்லாத மூர்க்கருக் கெத்தனை தான்புத்தி போதிக்கினும், நல்லார்க்குண் டான குணம்வருமோநடு ராத்திரியிற், சல்லாப் புடைவை குளிர்தாங்குமோநடுச் சந்தைதனிற், செல்லாப் பணஞ்செல்லு மோதில்லை வாழுஞ் சிதம்பரனே." எனவும், "வேல்கொடுத் தாய்திருச செந்தூர்க் கம்பியின் மீது வைக்கக, கால்கொடுத் தாய்கின் மணவாளனுக்குக் கவுணியர்க்குப், பால்கொடுத் தாய்மத வேளுக்குமூவர் பயப்படசெங், கோல்கொடுத் தாயன்னை யேயெனக் கேதுங் கொடுத்திலையே." எனவுந் துதித்து, அத்தலத்திலேயே வசிக்க வேண்டுமென்னும் அவாமேலீட்டினால், ஒரு திருமடம்வகுத்து, அதிலிருந்துகொண்டு, ஆலயத்தையடைந்து சபாநாயகரைத் தரிசிக்கும் பொழுது, அக்கடவுள் தினந்தோறும் பஞ்சாக்ஷரபடியில் பொற்காசு ஐந்து வைத்தருளப்பெற்று, அது காரணமாகப் படிக்காசுப் புலவரெனவும், படிக்காசுத் தம்பிரானெனவும் பெயர் வழங்க, சைவாசாரியாராகச் சிலகாலம் நன்மாணாக்கர்களுக்கு ஞானோபதேசம் பாலித்து வீற்றிருந்து, சில தோத்திரப் பிரபந்தங்களையும் அருளிச செய்து, அக்கடவுளுடைய திருவடிநீழலையடைந்தனர். இவராற் செய்யப்பட்டது புள்ளிருக்கு வேளூர்க் கலம்பக முதலியன.

பட்டி—சந்திரசருமன் மகன். விக்கிரமார்க்கன் தம்பியும் மந்திரியுமானவன்.

பட்டினத்தடிகள்—இவர் பட்டினத்துப் பிள்ளையாரென்றுஞ் சொல்லப்பட்டவர். இவர் காவிரிப்பூம் பட்டினத்திலே வேளாண்குலத்திலே திருவவதாரஞ் செய்தவர். சிலர் வணிகரென்பர், அக்கூற்று 'பிள்ளையார்' எனப் பெரிதும் வழங்கலின் நில்லாது. திருவெண்காட்டில் சிவபெருமான்பால் அன்புமிக்கவராகலின் திருவெண்காட்டடிகளெனப்பட்டனர். இவர்மரக்கல வாணிகத்தாற்பெரும்பொருள் படைத்துக் குபேரனைப் போல வாழ்ந்தவர். சிவகலையம்மையாரை மணந்து இல்லறமேற் கொண்டு பல்லறங்களும் வழுவின்றி நடத்தியவர். அக்காலத்தில் வறுமை மேலீட்டினற் பொருளுதவியின்றி வருந்திய ஆதிசைவரொருவர் சிவபெருமானைப் பிரார்த்தித்துவேண்ட, சிவபெருமான் மாணிடவுருவேற்றுச் சென்று, "என்னை உன் பிள்ளையாகக் கொண்டு விற்றுப் பொருள்பெற்று உன் வறுமையைத்தீர்த்துக்கொள்க" என, ஆதிசைவர் அங்ஙனமேமருதவாணரைப் பட்டினத்தடிகள்பால் விலைசெய்து பெரு நிதி பெற்று மகிழ்வுற்றுச சென்றனர்.

பட்டினத்தடிகள் அன்று முதல்

மருதவாணனைத் தம் அரிய மகனெனக்கருதி, தம் வர்த்தக முறையைப்பயிற்றி மரக்கலவியாபாரத்திலனுப்பிப் பொருளினைப் பெருக்கி வருகையில், ஒருமுறை அவர் மரக்கலத்திற் கொண்டு போன பொருள்களை யெல்லாம் விலை செய்த பெருநிதியை ஒரு தீவிலே சிவாலயத்திருப்பணியும் தருமமுமாகச்செலவிட்டுத் திரும்புகையில், எருமுட்டையும் அவலும் மரக்கல நிறைய ஏற்றிக்கொண்டு ஊரையடைந்து பொக்கிஷத்திற் சேர்த்து விட்டுப் "பொன்மணல் அவலிலும், மாணிக்கம் முட்டையிலுஞ் செறிந்துள." என்று, அதனைப் பிரித்தெடுத்துக் காட்டினர். அவருடன் மரக்கலத்தில் வந்தார்சிலர் அடிகளிடம் போய் இவர் பித்தராயினரென, அடிகள் அவரை ஓரறையில்விட்டுச் சித்தப்பிரமை கொண்டனரெனச் சில மெய்க்காப்பாளரையமர்த்தினர் சிறிது பின்னர் அவரைக்காணச் சென்ற பொழுது மருதவாணர் மறைந்து விட்டதால், பெரிதும் ஆகுலித்துத் தம்மனைவியிடம் சென்ற பொழுது, சிவகலையம்மையார் ஒரு சிறு பெட்டியை இது நம்மகன் நம்மிடங் கொடுக்கும்படி தந்தானெனக்களிப்புடன் பெற்றுத் திறந்து பார்க்கையில், அதனுள் "காதற்ற ஊசியும் வாராது காணுங் கடைவழிக்கே" என்றெழுதியதொரு சீட்டும், ஒரு காதற்ற ஊசியும் வைத்திருக்கக்கண்டு, பரிபாகஞானமுற்றும் அமையப்பெற்று, தம்தாயார் ஞானகலாம்பையை நோக்கி "நின்தவங் கைகூடியது. யான் இனித் துறப்பேனாயினும் கண்ணும் உன்னைப் பிரியேன்" என்று ஒரு வகைப்பற்று மின்றிப் புறஞ்சென்று ஆங்காங்குச் சிவயோகத்திலிருந்தும் பல அற்புதப் பாடல்களைப்பாடியும் விளங்கினர் பசிவந்தபோது இருகையேற்றுக் கிடைத்தது நுகர்ந்தும், குடியிருந்த மனைக்குக் கொள்ளிவைப்போமென்றும், வதிந்தனர். அவரினத்தவர் இச்செயல்களால் பெரிதும் நாணடைதல் கண்ட அடிகள் தமக்கை "இவனிறப்பினு நலமே" என்று விஷங்கலந்த ஓட்டப்பஞ் சமைத்து இவருண்ணக் கொடுப்பித்தனர். அதனை வாங்கிய அடிகள் "தன்வினை தன்னைச்சுடும் ஓட்டப்பம் வீட்டைச்சுடும்" என்று அவ்வீட்டிறப்பிற் செருக, அது எவவாறணைப்பினும் அணையாது அவ்வீடு முதல் அந்நகர வீடுகள் பலவற்றையு மெரித்தொழிந்தது. "குடியிருந்த மனைக்குக் கொள்ளிவைப்போம்" என்று சொல்லிக் கொண்டு அங்கேயே வசித்திருந்து தமது தாயார் இறந்தபொழுது மயானத்தையடைந்து மனம்வருந்திப் பத்துப்பாடல்கள் கூறி வாழைத்தண்டினாற் கொள்ளிவைத்து "யானுமிட்டதீ மூள்க மூள்கவே" எனத்தகனஞ் செய்தனர்.

திருவிடைமருதூரில்தம்பால் அன்பு கொண்டிருந்தானொரு சீடன் சன்னிபாதத்தா லிறக்க, அவன் மனைவி தாய் மாமி முதலினோர் வருந்தக்கண்டு அவனை யுயிர்பெற அநுக்கிரகித்தனர்.

அடிகள் வடபுலஞ்சென்று கோகரணமுதலியன பணிந்து நகருடுத்த சிறுபுறங்காட்டில் பத்திரகிரி மன்னனுடைய இராச்சியத்துள்ள ஆலயத்தில் ஒரு விநாயகர் முன்னர் நிஷ்டையிலிருக்கையில், அவ்வூரிலிருந்த சில கள்வர் மன்னன் மாளிகையில் அரும்பெருந் திரவியங்களைத் திருடிக்கொண்டு வருவோர், தம் நியமனப்படி விலையேறிய கண்டிகையொன்றை விநாயகருக்குச் சாத்துவதாக வெண்ணி, அவர்முன் னிஷ்டையி லிருந்த திருவெண்காடர் கழுத்திலிட்டுச்சென்றனர். திருவெண்காடர் அதனை யறியாது சிவத்தியானத்திலேயே யிருந்தனர். விடிந்த பிறகு அரசன் கட்டளையால் இராஜசேவகர்கள் கள்வரைத் தேடிக்காணாது, இவர் கண்டிகை பூண்டிருப்பது கண்டு அரசன் முன்னர்க் கொடுபோக, அரசன் இவன் கள்ளனென நினைத்துக் கழுவேற்றுகவென, கழுமுன்னர்க் கொண்டு போனபோது "முன்செய்த தீவினையோ விங்ஙனே வந்து மூண்டதுவே" எனக்கூற, அக்கழுமரம் பற்றிக்கொண்டு போயது. மன்னன் தன் அறியாமைக்கு மனம் வருந்தி இவர்பால் ஞானோபதேசம் பெற்றுப் பல்வகைப் பற்றுமொழித்துப் பிசசையேற்றுண்டு தேசசஞ்சாரஞ் செய்து கொண்டு சென்று அடிகளுக்கு முன்னரே திருவிடைமருதூரில் முத்திபெற்றனன். பத்திரகிரியாரிற் காண்க.

இவருடைய சம்பிரதியாயிருந்த சேந்தனாரை அக்காலத்து மன்னன் வருவித்து திருவெண்காடர் செல்வ முழுவதையுங் காட்டுகவென்று பல்வாறுறுத்துச் சிறையிலிட்ட. செய்தியை சேந்தனார் மனைவியு மைந்தனுஞ் சொல்ல, மனம் வருந்தி, "மத்தளை தயிருண்டானு மலர்மிசை மன்னி னானும், நித்தலுந் தேடிக் காணா நிமலனை யமல மூர்த்தி, செய்த்தலை வயல்பாய் நாங்கூர்ச்சேந்தனை வேந்தனிட்ட, கைத்தளை நீக்கி யென்முன் காட்டுவெண் காட்டு ளானே" எனக்கூறி, அவரைச் சிறைநீக்கி விலங்கு முரித்துவரப் பெற்றுசகாயேசசையிற் செல்லவிடுத்தவர். சேந்தனாரிற்காண்க.

பட்டினத்தடிகள் பற்பல சிவதல யாத்திரைசெய்து ஆங்காங்கநேக அற்புதங்களையுந் துதிகளையுஞ் செய்துகொண்டிருந்து திருவொற்றியூரிலே சிவயோக நிஷ்டையிற் சிவமாந் தன்மை யெய்தியவர்.

இவரியற்றியன: கோயினான் மணிமாலை, திருக்கழுமல மும்மணிக்கோவை, திருவிடை மருதூர் மும்மணிக்கோவை, கோயிற்றிருவகவல், கச்சித்திருவகவல், திருவேகம்பமுடையார் திருவந்தாதி, திருவொற்றியூர் ஒருபாவொருபஃது சில தனிச்செய்யுள் முதலியன. இவரியற்றிய சில பிரபந்தங்கள் பதினோராந் திருமுறையிற் சேர்க்கப்பட்டன.

இவர்தந் துறவின்மகிமையை, "பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப்போல், யாருந் துறக்கை யரிதரிது-நேரே,

மனத்துறவு மப்படியே மாணுவிவற்றி, லுனக்கிசைந்த தொன்றென்றேயோர்." என்னும் தாயுமான சுவாமிகள் திருவாக்கா னறிக.

பட்டினப்பாக்கம்—காவிரிப்பூம் பட்டினத்தின் உண்ணகர் [சிலப்]

பட்டினப்பாலை—எட்டுத் தொகையுளொன்ருன பத்துப்பாட்டில் ஒன்பதாவது. வேற்று நாட்டிற்குச செல்லத் தொடஙகிய தலைவன் தனது நெஞ்சைநோக்கித் தலைவியைப்பிரிந்து வாரேனென்று செலவழுங்கிக் கூறியதாகக காவிரிப்பூம்பட்டினத்தையும் சோழன் கரிகாற்பெருவளத்தானையும் அவனது பராக்கிரமததையும் அவனது செங்கோலையும் போழுகு பயப்பச சிறப்பித்து, கடியலூர் உருத்திரங்கண்ணனார் 301 அடிகளாற் பாடியது. இதற்கு நச்சினார்க்கினியர் உரை செய்துளர்.

பட்டீசுரர்—திருப்பட்டீசுரத்திற்சிவபெருமானுக்கு வழஙகுந்திருநாமம்

பட்டோஜிதீக்ஷிதன்—பாணினி வியாகரண சூத்திரங்களை யநுசரித்து, சித்தாந்த கௌமுதி, மனோரமா, சப்தகௌஸ்துபம் என்னுங கிரந்தஙகளியற்றிய பண்டிதர். இவர் 800 வருடஙகட்குமுன்னிருந்தவர்.

பணவிடுதூது—சதாவதானம்பெரிய சரவண கவிராயரியற்றியது.

பண்ணன்—சிறுகுடி கிழான் பண்ணனிற்காண்க.

பண்மொழியம்மை—திருப்பாண்டிக்கொடுமுடியில் உமாதேவியார் திருநாமம்.

பதஞ்சலி—இளாவிருதவருஷத்திலே அங்கிரசனுக்குஞ் சதிக்கும் பிறந்தவர். யோகசாத்திரஞ் செய்தவரும் பாணினி வியாகரணத்திற்கு மஹா பாஷியஞ்செய்தவரும் இவரேயாம். ஜனித்தவுடனே ஞானமுடைய ராயினர். சுமேருவில் ஓராலமரப் பொந்தில் லோலுபையைக்கண்டு மணஞ்செய்துகொண்டவர். பாஷியப்பதஞ்சலி, யோகப்பதஞ்சலி யென இருவரிருந்ததாகவுஞ் சிலர் கூறுவர்.

பதஞ்சலி முனிவர்—ஆதிசேஷனுடைய அவதாரமாகிய ஒரு முனிவர். அதாவது விஷ்ணுமூர்த்தியால் சிவபெருமானுடைய நடனவிசேடத்தைக் கேள்வியுற்ற ஆதிசேஷன் விண்டுவின் கட்டளைபெற்று இப்பெயர் முனிவனாய்த் தில்லையி லிருந்து தவஞ்செய்து ஆனந்ததாண்டவ தரிசனஞ் செய்துகொண்டிருக்கின்றார்.

பதரி—
பதரிகாசிரமம் } ஒரு புண்ணியவனம். இது சரசுவதி நதிக்கருகிலுள்ளது. பராசரரைப்புணர்நத மசசகந்தி யென்பாள் தான்பெற்றமகவாகியவியாச முனிவனைக்கிடத்திவைத்த இடம். வதரியென்றும் வழங்கும்.

பதரீபாசனம்—ஒரு புண்ணியதீர்த்தம். பிரபாவதியென்றும் பெயர் பெறும்.

பதிற்றுப்பத்து—கடைச்சங்கப் புலவரியற்றிய எட்டுத்தொகை நூலுள் நான்காவது. இஃதக்காலத்திருந்த சேரர் பலருடைய வள்ளற்றன்மையையும் புகழையு மெடுத்துக்கூறும். இஃதொவ்வொரு புலவர் பப்பத்தாக வியற்றிய நூறு பாடல்களையுடையது. இதனாலே

யே இத்தொகை பத்துப்பகுதியாகப் பகுக்கப்பட்டது. முதற்பத்து முதற் பத்தாம்பத்துவரை முறையே கூறப்படும். அவற்றைப் பற்றிய விடயங்களைத்தத்தம் சிறப்புவரிகளிற்காண்க.

பதினெண் கீழ்க்கணக்கு—எட்டுத்தொகை நூலுள் ஒன்றாய் விளங்குவது. இது பதினெட்டுநூல்களை ஒரு சேரத்தொகுத்தது. இதனுள் (1) நாலடியார் (2) நான்மணிக்கடிகை (3) இன்னா நாற்பது (4) இனியவை நாற்பது (5) கார் நாற்பது (6) களவழி நாற்பது (7) ஐந்திணையைம்பது (8) ஐந்திணையெழுபது (9) திணைமொழியைம்பது (10) திணைமாலை நூற்றைம்பது (11)....................(12) முப்பால் [திருக்குறள்] (13) திரிகடுகம் (14) ஆசாரக்கோவை (15) பழமொழி (16) சிறு பஞ்சமூலம் (17) முதுமொழிக்காஞ்சி (18) ஏலாதி யெனுநூல்கள் சேர்ந்துள. இதனை, "நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப், பால்கடுகங் கோவை பழமொழி மாமூல, மெய்ந்நிலைய காஞ்சியோ டேலாதி யென்பவே, கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு"—என்பதனு னுணர்க. கீழ்க் கணக்கி னிலக்கணத்தை, "அடிநிமிர் வில்லா வெள்ளைத் தொகுதி, அறம்பொருளின்பமடுக்கிய வாயவை, திறம்படவுரைப்பது கீழ்க்கணக் காகும்."— பன்னிரு பாட்டியல். இப்பதினெட்டு நூல்களில் கோவை திருச்சிற்றம்பலக் கோவை யென்றும், காஞ்சி மதுரைக்காஞ்சி யென்றும், முப்பால் திருக்குறள் அல்லாத மற்றொருநூலென்றுஞ் சொல்வாருமுளர். அக் கூற்றுப் பொருந்தாது.

பதுமகோமளை—விசுவ கர்மாவின் மகள். சூரபத்மன்மனைவி. பானுகோபனை யீன்றவள். சூர்பன்மன் இறந்தவுடன் தீப்பாய்ந்திறந்தவள்.

பதுமநிதி—தாமரைபோலுள்ள தொருநிதி. இது எடுக்குந்தோறுங் குறைவின்றிச் செல்வத்தைத்தரும்.

பதுமபுராணம் — பாத்ம புராணத்திற்காண்க. [சூளா]

பதுமரதன் — மேகபுராசகுமாரன்

பதுமர்—புத்தர்களில் பதினொன்றாவதாகத் தோன்றியவர்.

பதுமனார்—நாலடியாரைப் பால்பலதிகாரங்களாகப் பகுத்துச் சிறந்ததோருரையியற்றியவர்.

பதுமுகன்—(1) சுக்கிரீவன் சேனை வீரரிலொருவானரன் (2) சீவகன் றோழர் நால்வரி லொருவன்.

பதுமை—(1) ஸ்ரீதத்தன் மனைவி (2) சீவகன் மனைவிகளிலொருத்தி.

பதுமோத்தரர்—புத்தர்களிற் பதின்மூன்றாவதாகத் தோன்றியவர்.

பத்தாம்பத்து—எட்டுத் தொகையளொன்றான பதிற்றுப்பத்தில் பத்தாவது. இதுபெரும்பாலுங்காணப்படாமையின் இறந்தது போலுமெனப் புறநானூற்றின் முகவுரையிற் காட்டப்பட்டுளது.

பத்திரகர்மன்—சுக்கிரன்மகன். இவனும் தைத்திய குரு.

பத்திரகாளி — பார்வதி தேவியின் அம்சமாகிய ஒரு பெண் தெய்வம்.

பத்திரகாளிபீடம்—அறுபத்து நான்கு சத்திபீடங்களிலொன்று. இது கோகர்ணத்திலுள்ளது.

பத்திரகிரியார் — பட்டினத்தடிகளைக் கள்வனென மயங்கிக் கழுவேற்ற வுத்தரவளித்து அது தீப்பற்றியெரிந்தது கண்டு அவனைப் பெரியனென் றுணர்ந்து, அவர்பால் ஞானோபதேசம் பெற்று அரசுரிமையை விடுத்துத் துறவுபூண்டவர். இவர் பலகாலம் அடிகள் அடிகட்கண் அன்பு செய்து வந்து முத்தி பெற்றவர். இவர் அடிகளோடு பிரியாது வசித்தவர். திருவிடைமருதூர் மேற் கோபுர வாயிலில்வசித்திருக்கையில், கீழ்க் கோபுர வாயிலிலிருந்த பட்டினத்தடிகள்பால் சிவபெருமான் ஒரு அடியவர் வடிவேற்று உணவு வேண்டுமெனக்கேட்க, அடிகள் "என்னிடத்துணவின்று" என்றும், பத்திரகிரியார் நாய் ஒன்றனை வளர்த்துக்கொண்டு, உண்டு எஞ்சிய உணவை ஓரோட்டினிற்சேமித்து வைத்திருப்பதையும் விலக்கக் கருதி, "குடும்பி மேல்வாயிலி லிருக்கின்றான். அவனிடஞ் சென்றாற் கிடைக்கும்." என்று கூறியனுப்பினார். அவர் சென்றுகேட்ப, பத்திரகிரியார் "இவவோடும், கஞ்சியின்றியடைந்த இப்பெண்ணையுமா என்னை சுமுசாரக்காரனுக்கின" என்று வெகுண்டு, அவவோட்டினை நாயின் மீதெறிய, நாயும் இறந்தது. ஓடுமொடிந்தது. அது கண்ட மருதப்பிரான் புன்னகை செய்து மறைந்தனர். அச்சமயம் இவரியற்றிய நூல் பத்திரகிரியார் புலம்ப லெனப்படும். அது வாசித்தவனையும் கேட்டவனையும் உடலோடுருக்கும் ஆற்றலுடையது.

பின்னர் அவர் உச்சிட்டம் புசித்த விசேடத்தால் அந்நாய் காசிராஜனான விசுவகுத்தன் மகளாய்ப் பிறந்து வளர்ந்து மணப்பருவமடைந்து, தகுந்தநாயகன் கிடைக்கப்பெறாமல் தந்தை வருந்துவது கண்டு "என் சற்குரு திருவிடைமருதூரி லிருக்கிறார். அவரிடம் எனைவிடுக. அவரே என்னை ஒருவருக்குரியளாக்க வல்லவர்" என, அரசன் அங்ஙனமே பல்லக்கிற்கொடுசென்றனன். அம்மங்கை பத்திரகிரியாரை யடைந்து "அடிநாய்மீட்டுந் திருவருட்பேற்றுக்கே வந்தது" என்று பணிய, அவர் அறிந்துகொண்டு, அப்பெண்ணைக் கைப்பற்றிக் கொண்டு கீழைக் கோபுரத்திருந்த பட்டினத்தடிகளை யடைந்து, "இந்நாய்க்கும் பிறவி வரலாமோ" என, அடிகள் "சிவன் செயல்" என, அந்நிலையில் ஒரு சோதியுண்டாக, சிவாக்ஞைப்படி பத்திரகிரியார் அப்பெண்ணுடன் அதிற் புகுந்து முத்தியெய்தினர்.

பத்திர சேனன் — யது மரபினனாகிய மகிஷ்மந்தன் மகன்.

பத்திரதன் — சம்பன் பௌத்திரன்; இவன் மகன் பிருகத்கர்ணன்.

பத்திரவாகு — யதுமரபிற்பிறந்தவன்; வசுதேவன் புதல்வரிலொருவன்; சுபத்திரன் சகோதரன்.

பத்திரன் — (1) யதுமரபினன்; வசுதேவன் மகன்; சுபத்திரன் சகோதரன். (2) அந்தகாசுர நகரத்தரசன். சிவபக்தி முதிர்ந்தவன். வேதியருக் கன்னமளித்து வருகையில், சிவாக்ஞையால் ஒரு துவஜத்தை நிறுத்தி, சற்பாத்திர னொருவன்

புசிக்கில் இத்துவஜம் வீழுமென நியமஞ்செய்து, பன்னாட்சென்ற பின் ஆதிசைவ வேதியரொருவர் புசிக்கத்துவஜம்வீழப்பெற்று ஆதிசைவர் மகிமையை யறிந்து அவர்கள்பால் மிக்க பத்தி வாய்ந்து, சிவத்தொண்டுசெய்து முத்திபெற்றவன். [சைவபு]

பத்திராவதி—ஒருநகரம்; அஸ்தினபுரத்திற்கு ஐந்து காத தூரத்துள்ளது.

பத்திரை—(1) துர்க்கை (2) வீரபத்திரர் மனைவி. தக்ஷயாகத்திற்கு வந்திருந்த தேவமாதர்களைத் தண்டித்தவள் (3) வசுதேவன் மனைவி (4) கேகயன் புத்திரி, கண்ணன் மனைவியரிலொருத்தி. (5) சூரியன் மனைவி சாயாதேவி யிடம் பிறந்த மகள்.

பத்திரைபீடம்—சத்திபீடங்கள் அறுபத்துநான்கனு ளொன்று. இது பத்திரகர்ணிகத்திலுள்ளது.

பத்தினிக்கடவுள்—கண்ணகி. இவள் கோவலனோடு சுவர்க்கம்புக்க பின்னர் இப்பெயரெய்தினள். இலங்கையிற் பலவிடங்களிலுள்ள கண்ணகி கோயிலைப் பத்தினிக்கோயிலெனச் சிங்களர் வழங்கி வருவதாகத் தெரிகிறது. [சிலப்]

பத்துப்பாட்டு — திருமுருகாற்றுப்படை,பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநெல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் என்னும் பத்துப்பாடல்கள். இவற்றின் பிரபூரவங்களை அவ்வவற்றின் சிறப்பு வரிகளிற் காண்க. பத்துப்பாட்டி னிலக்கணத்தை, "நூறடிச் சிறுமை நூற்றுப்பத் தளவே, யேறிய வடியி னீரைம் பாட்டுத், தொடுப்பது பத்துப் பாட்டெனப் படுமே." "அதுவே, அகவலின் வருமென வறைகுவர் புலவர்." "புரவலன் பரிசு கொண்டு மீண்ட, விரவலன்வெயி றெறு மிருங்கா னத்திடை, வறுமையுடன் வரூஉம் புலவர் பாணர், பொருநர் விறலியர் கூத்தர்க் கந்தப், பாவல னூர் பெயர்கொடை பராஅ, யாங்குநீ செல்கென விடுப்பதாற் றுப்படை" "ஓங்கியவதுதா னகவலின் வருமே."—என்னும் பன்னிருபாட்டியற் சூத்திரங்களா னறிக. இப்பத்துப்பாடல்கட்கும் உரையியற்றினோர் மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர். அப்பத்துப்பாட்டுக்க ளிவையென்பதை, "முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை, பெருகு வளமதுரைக் காஞ்சி - மருவினிய, கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப், பாலை கடாத்தொடும் பத்து." எனுமவெண்பாவானறிக.

பத்மபாதர்—ஜனந்தனரிற்காண்க.

பத்மப்பிரபை—ஜைன மதஸ்தாபகரான இருபத்து நான்கு தீர்த்தங்கரரில் ஆறுவதாகத் தோன்றியவர்.

பத்மாதன்—மேகபுரமன்னன் மகன்.

பத்மாவதி—(1) விந்தகிரிக் கருகிலுள்ள தொரு நகரம். (2) தரிராசகுமாரி.

பந்தனந்தாதி—ஔவைப் பிராட்டியால் வணிகசிரேஷ்ட னொருவனை அவனுடைய ஈகை முதலிய நற்குணவிசேடங்களைச் சிறப்பித்துச

செய்யப்பட்டதொரு பிரபந்தம்.

பந்தன்—(1) மனுமரபினன்; திரணவிந்து பிதா; புதன் என்றும் நாமாந்தரம். (2) ஔவையாற்புகழ்ந்து அந்தாதி பாடப்பெற்ற ஒரு வணிக சிரேட்டன்.

பப்பிரு—(1) யதுமரபிற் சாத்துவதன் பௌத்திரன் (2) விதர்ப்பன் பௌத்திரன் (3) திருஹியன்மகன்.

பப்பிருவாகனன்—மணலூர் மன்னனாகிய சித்திரவாகனன் மகள் சித்திராங்கதைக்கும் அர்ச்சுனனுக்கும் பிறந்தவன். தர்மராஜன் செய்த அசுவமேதத்தில் இவன் அசுவத்தைத் தடுத்து அர்ச்சுனனோடு போர்செய்து அவனைக் கொன்றவன். உலூபியென்னும் நாக கன்னிகை அர்ச்சுனனை உயிர்ப்பித்தமையின் தன்தந்தை யென்றறிந்து தக்க மரியாதை செய்து அசுவமேதப்புரவியை யொப்புவித்தனுப்பியவன். [கருகிலுள்ளது.

பம்பை—ஒருவாவி; கிஷ்கிந்தைக்

பம்மை—ஒரு தவப்பெண் [சீவக]

பயாபதி—பிரசாபதியரசன் [சூளா]

பயை—(1) ஹேதியினுடையதாய்; (2) வித்யுத்கேசனுடையதாய்.

பயோஷ்ணி—ஒருநதி; விதர்ப்பநாட்டிற் பிரவாகமாகி வரத நதியிற் கலப்பது.

பரங்கருணையம்மை—திருப்புனவாயிலில் உமாதேவியார் திருநாமம்.

பரங்கிரி—திருப்பரங்குன்றம். இது முருகக்கடவுள் ஆறு படை வீடுகளிலொன்று.

பரசமயகோளரி—திருஞான சம்பந்தப்பிள்ளையாருக்கு வழங்கி வரும் பல திருநாமங்களிலொன்று. பிற சமயங்களாகிய யானைகட்குச்சிங்கமாயுள்ளவரென்பது பொருள்.

பரசுபாணி—சிவபெருமான்.

பரசுராமர்—விஷ்ணு மூர்த்தியின் ஆறாம் அவதாரம். ஜமதக்கினி முனிவர்க்கும் இரேணுகைக்கும் பிறந்தவர். கார்த்தவீரியார்ச்சுனன் பேரழகைக்கண்டு வியந்த இரேணுகையைச் சிரச் சேதஞ் செய்யும்படி தந்தை கொடுத்த கட்டளைப்படி தாயைச சிரபங்கஞ் செய்து, மீட்டுந் தந்தையை வேண்டி அவளை உயிர்ப்பித்தெழுப்பியவர். கார்த்தவீரியன் ஜமதக்கினி முனிவரைப் பகைகொண்டு கொன்று விட்டுச சென்றதை, வெளியிலிருந்து ஆசிரம முற்றுக் கண்ட பரசுராமர் பெரிதுஞ் சினந்து, "க்ஷத்திரியர்களை அடியுடன் த்வம்சஞ் செய்வேன்" எனப் பிரதிக்ஞை செய்துகொண்டு அங்ஙனமே செய்து அவ்வுதிரத்தாற் பிதிர்கடன் முடித்தவர். இவர் இருபத்தொரு தலைமுறை வரையில் க்ஷத்திரிய த்வம்சஞ் செய்தனர். அப்பழி நீங்குகைக்காகக் கேரளநாட்டை அந்தணர்க்குத் தானஞ் செய்ததாகவுங் கூறுவர். சிவபெருமானை நோக்கிப் பெருந்தவஞ் செய்து மிக்க வரங்களும் வில்வித்தையிற் பேராற்றலும்பெற்றவர். அப்படித் தவஞ்செய்கையில் சிவபெருமான் புலையனாகவும், உமாதேவி புலைச்சியாகவும், கணேச சுப்பிரமணியர் புலைச்சிறாராகவும், வேதநான்கும் நான்கு நாய்களாகவும் உருக்கொண்டுசென்று அவரோடு விநோதமாகச் சிறிதுநேரம் குறும்

புகளியற்ற, இவர் புலையர்களே! நான் வேதியன். என்னையணுகா தீர்களென, வந்தவர்கள் நீ பெரும் புலையன். தாய்க்கொலை புரிந்த வன் என்று, இன்னோரன்ன பேச சுக்களைச் சொல்லித் துன்புறுத் திப் பின்னர் சிவத்தியான பரனாக நிற்கக் கண்டு நிஜசொரூபமாகக் காக்ஷி தந்து பல வரங்களளிக்கப் பெற்றவர். க்ஷத்திரியரிற் பலர் இவருக்கஞ்சி மறைந்து வசித்தும், மணமகனுயிருப்பவனைக் கொல் லுவதில்லையென இவர் கொண்ட நியமனமுணர்ந்து எந்நாளுங்கை யிற் கங்கணமணிந்து கொண்டும் பிழைத்திருந்தார்கள். இதுகாரண மாகவே தசரதன் முதலானோர் எண்ணில்லா மனைவியரை மணம் புரிந்தனரென்ப. இவர் ஸ்ரீராமனை யெதிர்த்து அவமான முற்றனர். இவரே பீஷ்மனுக்கு வில்லாசிரிய ராயிருந்தவர். ஒரு காலத்தில் காசி ராஜ குமாரியை பீஷ்மர் மணந்து கொள்ளும்படி பலவாறு கூறியுங் கேளாமையிற் சினந்து போர் புரிந்து அபஜயமுற்றன னொன்றும் பாரதஞ்சொல்லும். இவரைப் பற்றிய மற்றுஞ் சிலவற்றை ஜமதக் கினியிற் காண்க.

பரஞ்சோதிமுனிவர்—இவர் வேளாண்குலத்துதித்து அபிஷேகஸ்த ராயிருந்தவர். சுத்தசைவப் பரஞ் சோதி முனிவனென்றுஞ் சொல் லப்படுவர். இவர் செய்த திருவிளை யாடற்புராணம் அதிக கற்பனலங் காரங்களும், சொன்னயம் பொரு ணயங்களும், பத்திரசமும் நிறைந்ததொரு அரும்பெரும் பொக் கிஷமும் சைவர்கட்கொரு கண் ணுமாயுள்ளது. இவர் வேதபுரா ணஞ் செய்த நிரம்ப வழகியாருக்கு மைத்துனரெனத் தெரியவருகின் றது. மதுரைப்பதிற்றுப்பத் தந் தாதி, திருப்பரங்கிரி புராண முத லியனவு மிவராலியற்றப்பட்டன.

பரணர்—கடைச்சங்கப் புலவரி லொருவர். கபிலரிடத்தில் மிக்க நண் புற்றவர். இவரிருவரையுஞ் சேர்த் துக் கபிலபரணரென வழங்குவ துங்காண்க. இவர் எட்டுத்தொ கையுளொன்றான பதிற்றுப்பத் தில் ஐந்தாம் பத்தினைப் பாடி, கோச் செங்குட்டுவனிடம் உம்பற் காட்டுவருவாயையும், அவன்மகன் குட்டுவன் சேரலையும் பரிசிலாகப் பெற்றவர். இவரை ஔவையும் தமது பாட்டில் "சென்றமர் கடந்துநின் னாற்ற றோற்றிய - வன் றும் பாடுநர்க் கரியை யின்றும் -பர ணன் பாடினன்" எனப்புகழ்ந்து பாடப்பெற்றவர். இவராற்பாடப் பெற்றோர் சோழன் உருவப்பஃ றேறிளஞ்சேட்சென்னி, சேர மான் குடக்கோ நெடுஞ் சேரலா தன், சோழன் வேற்பஃறடக் கைப் பெருநற்கிள்ளி, வையாவிக் கோப்பெரும்பேகன், சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டு வன் முதலினோர். [புற] இவராற் செய்யப்பட்ட சிவபெருமான் திரு வந்தாதி பதினோராந் திருமுறை யிற் காணப்படும். திருவள்ளுவ மாலையிலும் இவர் கவியுண்டு.

பரதகண்டம்—நாம் வசிக்கும் இக் கண்டம். இது நம்புராணங்களிற் பற்பல வகையாக இடவகை மாறி

யுங் கூறப்பட்டிருக்கின்றது.

பரதசேனபதீயம் — ஒரு நாடகத் தமிழ் நூல். இது ஆதிவாயிலா ரென்பாராற் செய்யப்பட்டது. இந் நூல் சிலப்பதிகார வுரையில் மேற் கோளாகக் காட்டப்பட்டுளதன்றி இதைப்பற்றிய பிற விடயங்கள் ஒன்றுந் தெரியவில்லை.

பரதம்—ஒரு நாடகத்தமிழ்நூல். இதனை அடியார்க்கு நல்லார்தமகாலத் திலே "அஃதிறந்து" என்றார்.

பரதன்—(1) தசரதன்மகன். இராமன் தம்பி; நீதிமான். தன் தமயன் இராமனுக்குரிய அரசுரிமையைத் தன்தாய் கைகேசியின் வஞ்சனையால் தான்பெற்றதையறிந்து அதனை வேண்டாமென்று இராமனுக்குச சொல்லி, இராமன் பிதுர் வாக்கிய பரிபாலனஞ் செய்துவன வாச முடித்தே வருவேன் எனக் கூறி இவனையே இராச்சியத்தைப் பார்த்து வரும்படி சொல்ல, அதனை மேற்கொண்டு இராமன் வனவாச முடித்துவரு மெல்லையும் நந்திக் கிராமமென்னும் நகரிலிருந்து ஒருவாறு அரசியல் நடத்தியவன். இராமன் குறித்தகாலத்தில் நகரிற்குத் திரும்பிவராமையின் தீப் பாய்தற்கு இடஞ்செய்து அதனைச சுற்றிவந்து கொண்டிருந்து அநுமனால் இராமன் வருகையுணர்ந்து எதிர்கொண் டழைத்து வந்து இராச்சியாபிஷேகஞ் செய்வித்தவன் (2) துஷ்யந்தன் சகுந்தலையைக் கூடிப் பெற்ற புதல்வன். இவன் கண்ணுவ ராச்சிரமத்திலே வளர்ந்து உரிய பிராயத்தில் தந்தையை யடைந்து அரசுரிமை கொடுக்கப் பெற்றவன். இவன் ஆரியதேசமுழுதும் அரசாண்டமையின் பாரத வருஷ மெனும் பெயர் அத்தேசத்திற்காயது. இவனுடைய ஒன்பதாஞ் சந்ததி குரு. குருவினுடைய பதினன்காஞ் சந்ததி சந்தநு. சந்தநுவுக்கு நான்காஞ் சந்ததிபாண்டவர். (3) சிங்கபுரத்தரசனாகிய வசுவென்பவனுடைய வேலைக்காரரில் ஒருவன்; சங்கம னென்னும் வணிகனைக் காரணமின்றிக் கொல்லுவித்தமை பற்றி அவன் மனைவி நீலியென்பாளாற் சபிக்கப்பட்டான். இவனே கோவலனாகப்பிறந்தவன் [மணி] (4) சீவகன் புதல்வரி லொருவன்.

பரத்துவாஜன்—ஒரிருடி. உதத்தியன் புத்திரன்; இவன் தாய் மமதை; பிரஹஸ்பதி பிரசாதத்தால் உதித்தவன்.

பரத்துவாஜி—ஒருநதி; மாளவதேசத் திற் பிரவகிப்பது.

பரமசிவன்—சிவபெருமான்.

பரமதிமிரபானு—இது புறமதங்களைக் கூறி மறுத்துச சைவசித்தாந் தத்தை நிலைநாட்டுவது. இதன் ஆசிரியர் மறைஞான சம்பந்த சிவாசாரியர். இவர் மறைஞான தேசிகரென்றுஞ் சொல்லப்படுவர்.

பரமதத்தன் — காரைக்கா லம்மையாரை மணஞ்செய்த வணிகன். அம்மையாருடைய தெய்வீகத்தை யுணர்ந்து பயந்து வேற்றூர் சென்று, ஒரு கன்னிகையை மணந்து அவள் பெற்ற பெண்ணிற்குப்புனிதவதி யென்று அம்மையார் பெயரையே பெயராகவிட்டு வசிப்பதுணர்ந்து, அம்மையார் பரிசனர்சூழ

ஆங்குற்ற பொழுது, அவனைப் பணிந்து தெய்வமென நின்றவன். காரைக்காலம்மையாரிற் காண்க.

பரமேசுவரிபீடம்—சத்திபீடம் அறுபத்து நான்கனுளொன்று. இது ஞானிகளுள்ளந்தோறு முள்ளதெனத் தேவிபாகவதங்கூறும்.

பரமேஷ்டி—(1) பிரமன் (2) இந்திரத்துய்ம்னன் மகன்.

பராசகுஞ்சான்—ஆயோதன வீர பாண்டியனுக்குப் பின் மதுரையை யரசு செய்த பாண்டியன்.

பராக்கிரமபாகு—ஈழநாட்டிரசரி லொருவன்.

பராக்கிரமவாகு பாண்டியன்—விக்கிரமவாகு பாண்டியனுக்குப் பின் மதுரையையரசுபுரிந்தவன்.

பராங்குசநம்பி—வைஷ்ணவ சிங்காசனாதிபதிகள் எழுபத்து நால்வரி லொருவர்.

பராசரபட்டர்—வைணவ சிங்காசனாதிபதிகள் எழுபத்து நால்வரி லொருவர்.

பராசரமுனிவன் — (1) வசிஷ்டன் பௌத்திரன்; சக்தி புத்திரன்; வியாசன் பிதா; சுகன் பாட்டன். இவன் தந்தையாகிய சக்தியை ஓரிராக்கதன் கொன்று தின்றானென்றுணர்ந்து, அவனையும் பிற ராக்கதரையுங் கொல்ல ஒருயாகஞ் செய்து அதனை முடித்து யமுனையாற்றை ஓடத்திலிவர்ந்து கடக்கையில், அதனைச் செலுத்திய சத்தியவதி யென்பாள் தனித்து வந்தமையின் அவளைக்கூடி வியாசனைப்பெற்றவன். அவளைப்புணர்கையில் அவள்மீது வீசிக்கொண்டிருந்த துன்மணத்தையும் அதனால் அவளுக்குற்றமச்சகந்தி யென்னும் பெயரையுமாற்றி, நெடுந்தூரம் பரிமளங்கமழுந் தேகமும் அதனால் யோசனைகந்தி பரிமளகந்தியெனும் பெயர்களும் எய்தச் செய்தனன். (2) சோழநாட்டுள்ள ஓரந்தணன். இவன் மலைநாடடைந்து மாந்தரஞ் சேரலிரும்பொறையென்னும் சேரராஜனிடத்துப் பரிசுபெற்று மீண்டுவருகையில், திருத்தங்காலி லிருந்த தக்ஷிணாமூர்த்தி யென்னும் வேதியச சிறுவனைப் பரீக்ஷித்து அவனுக்குள்ள கல்வி வன்மையைக் கண்டு அவனுக்கு நன்கொடை யளித்தவன். [சிலப்]

பராசரஸ்மிருதி — பராசர முனிவா செய்த தருமசாஸ்திரம். இதுதான் கலியுகத்திற்குரிய தென்பர்.

பராசத்தி—பரமசிவத்தில் ஆயிரத்தொரு கூறுகொண்டது; பக்குவமலராகிய ஆன்மாக்களைக் கருணையாலனுக்கிரகிப்பது.

பராந்தகன்—ஒரு சோழன்; சார முனிவர் சாபத்தால் தான் அரசு செலுத்திய உறையூர் மண்மாரியா லழியப்பெற்றவன்.

பராவசு—ரைப்பியமுனிவன் புத்திரன்; பாரத்துவாசன் சகோதரன். இவன் ஓரரசனுக்கு யாகஞ்செய்ய சென்றிருக்கையில், அவன் மனைவியை யவக்கிரீவனெனுமுனிவன் கிரகித்துக்கொண்டு, இரதிகேளி யனுபவிப்பதை ரைப்பிய முனிவனுணர்ந்து, மருகியுடலைத் துண்டித்து, அக்கினியில் ஓமஞ் செய்து, தன்னுடையயோகமாயையால் அவனுடையதோலை ஓரிராக்

கதப் பெண்ணுக்கி அயோக்கிய னுன யவக்கிரீவனை விழுங்கி விடு கென்றனுப்ப, அந்தஸ்திரீ தன் கோர ரூபத்தை யகற்றி, பழைய முனி மனைவி வடிவுடன் யவக்கிரீவனையடைந்து, ரைப்பிய முனிவனைக் கொல்லும்படி யழைத்துவருகையில், சூலபாணியாயிருந்த ஒரசுரன் யவக்கிரீவனைக் கொன்று அந்த ஸ்திரீயைக் கொண்டு சென்றனன். யவக்கிரீவன்றந்தை தன் மகனிறந்து கிடத்தல்கண்டு, அவனை ரைப்பியமுனிவனே கொன்ருனென்று, நீ யென்மகனைக் கொன்றமையின் நீ யுன் புதல்வனுலுயிரொழிகவெனச சபித்தனன். சில காலஞ் சென்றபிறகு ரைப்பிய முனிவன் மான்ருேல் போர்த்துக் கொண்டுசந்தியாவந்தனஞ்செய்து திரும்புகையில், பராவசு தந்தை யென்றுணராது மானென்று கருதிக் கணையொன் றெய்துகொன்றனன். பின்னர்த் தகனகிரியையை முடித்துப் பரத்துவாசராகிய சகோதரரிடஞ் சென்று முறையிட்டு அதற்குப் பிராயசித்தங் கேட்க, அவர்தானே தவத்திலிருந்து அப்பிரமஹத்தியை யகற்றிப் பராவசுவினிடம் வர, தந்தையைக் கொன்றதற்காகத் தவஞ்செய்த நீ யிகழுவராதே யென, பரத்துவாசர் ஒன்று முறையாதிருப்ப, மன்னவனுட்கள் கேட்டுப் புலவாறு தன் புறத்த, அவர் தேவர்களே! யான் தந்தையைக் கொன்றிலேன். சற் கருமானுஷ்டான முடையோனு யின் இறந்த ரைப்பிய முனிவனும் யவக்கிரீவமுனிவனும்உயிர்பெறுக வென, அவர்களிருவரும் அவ்வாறே உயிர்பெற்றனர். [சைவபு]

பரிக்ஷித்து—(1) குருவின் புதல்வரி லொருவன். ஜன்னுவுக்கிளவல் (2) அபிமன்னன் புதல்வன்; அர்ச்சுனன் பௌத்திரன். இவன் தாய் உத்தரை. இவன் அஸ்திஞபுரியைக் கலியுக முதலில் அரசுசெய்தவன். இவன்மகன் ஜனமேஜயன்.

பரிஞமவாதசைவன்—உயிர்கெட்டுக் கூடி அரனடியில் ஒன்ருகிப்போமென்றுசொல்லும் ஓர் அகசசமயி.

பரிதி—திருக்குறளுக்கு உரைசெய்த பதின்மரிலொருவர்.

பரிபாடல்—ஒருவகைப்பாவின் பெயராகிய பரிபாடல் அப்பாவாலாகிய நூலுக்காயிற்று. தலைச்சங்கப்புலவர் செய்த பரிபாடல் இறந்தது. இப்பொழு துள்ளது கடைசசங்கப்புலவர்களா லியற்றப் பட்டது. அஃது எழுபது பாடல்களையுடையது. அவற்றுள், திருமாலுக்கு எட்டுப்பாடலும், குமரவேளுக்கு முப்பத்தொருபாடலும், கடலுக்கு ஒரு பாடலும், வையையாற்றிற்கு இருபத்தாறு பாடலும், மதுரைக்கு நான்கு பாடலுமாகப் பாடப்பட்டுள்ளன வென, அடியில் வரும் வெண்பாவா லறியப் படுகிறது. "திருமாற் கிருநான்கு செவ்வேட்கு முப்பத், தொருபாட்டுக் காடுகோளுக் கொன்று - மருவினிய, வையையிரு பத்தாறு மாமதுரை நான்கென்ப, செய்யபரி பாடற் றிறம்." அவ்வப்பாடல்களின் கீழ் அவற்றையாக்கிய ஆசிரியர் பெயர்கள் கூறப்பட்டுள. அவவெழுபது பாடல்களில் இப்பொழுது கிடை

ப்பன இருபதுபாடல்களே. இதனைத் தொகுத்தோருந் தொகுப்பித்தோரும் இன்னாரின்னாரென விளங்கவில்லை.

பரிமளகந்தி—சத்தியவதி; மச்சகந்தி; பராசரனைப்புணர்ந்து வியாசனை யீன்றவள். இவளே சந்தனு மனைவியாய்ச் சித்திராங்கதன் விசித்திர வீரியனென்போரைத் தந்தவள். இவளைச்சந்தனுவுக்கு மணம் புரிவிக்கவேண்டுமென்னுங் கருத்தினாலேயே கங்கை புத்திரனாய்த் தேவவிரதன் காங்கெயன் என்னும் பெயர்கள் வகித்த சந்தனு புத்திரன் தான் மங்கையைப் புணராமல் காலமுழுதும் பிரமசாரியா யிருப்பேனெனப் பீஷ்மஞ் செய்துகொண்டு பீஷ்மனெனும் பெயரால் விளங்கினன்.

பரிமளசுகந்தநாயகி— திருவேள்விக்குடியில் உமாதேவியாருக்கு வழங்குந் திருநாமம்.

பரிமேலழகர்—காஞ்சி நகரத்திலே வேதியர் குலத்திலுதித்து வடமொழி தென்மொழிகளில் அதிவல்லுநராய் விளங்கியவொரு புலவர். இவர் தெய்வப் புலமைத் திருவள்ளுவனாரியற்றிய திருக்குறளுக்கு உரைசெய்த ஆசிரியர் பதின்மரில் ஒருவர். "வள்ளல் சிலைப்பெருமாணச்சர் சாத்தர் வழுதிமுதற், றள்ளுவனார்க்குந் தலையான பேரையுந் தன்னுரையை, விள்ளுவனார்க்குந் திருக்காஞ்சி வாழ்பரிமேலழகன், வள்ளுவனார்க்கு வழிகாட்டினன்றொண்டை மண்டலமே." என்பது தொண்டை மண்டல சதகத் திருபத்தாறுஞ் செய்யுள். திருக்குறளுக்குரையிட்டவர்களில் இவராலியற்றப்பட்ட வுரையே சிறந்ததொன்று என்பதை, "பாலெல்லா நல்லாவின் பாலாமோ பாரிலுள, நூலெல்லாம் வள்ளுவர்செய் நூலாமோ - நூலிற், பரித்தவுரை யெல்லாம் பரிமேலழகன், றெரித்தவுரையாமோதெளி." எனும் அக்காலத்தவர் வெண்பா அறிவுறுத்தும். இவர் சைவாகமவுணர்ச்சியுடைய ரென்பது அவவுரையில் ஆங்காங்கு இடநேர்ந்துழி எடுத்துக்காட்டியுள்ளன வற்றானுணரப்படும். இவர் தம் உரைச்சிறப்பை எடுத்தெழுத எல்லையின்றாம். தமக்கு அங்கீகாரமான பிறர் உரைகளை விதந்தெடுத்துக் கூறியும், மறுதலைப்பட்டவருரைகளை நியாயவாயிலாக மறுத்துமுள்ளனர். இவர் பரிபாடலுக்கும் உரையாசிரியர்.

பருப்பதமங்கை — திருப்பருப்பதத்திலே உமாதேவியாருக்கு வழங்குந்திருநாமம்.

பருப்பதேசர்—திருப்பருப்பதத்திலே சிவபெருமானுக்கு வழங்குந் திருநாமம்.

பருதியப்பேசர்—திருப்பருதி நியமத்தில் சிவபெருமான் திருநாமம்.

பருத்திக்கொல்லை நம்பி—வைணவ சிங்காசனாதிபதிகள் எழுபத்துநால்வரி லொருவர்.

பர்க்கன்—(1) சிவபெருமான் (2) பிரமதேவன்.

பர்ஜன்யன்—மேகங்களுக்கு அதிதேவதை. சூரியன் இந்திரன் வருணன் இவர்கட்கும் இப்பெயர் வழங்கி வருகின்றது.

பர்ணாதன்—இப்பெயர்க்குச் சருகு பக்ஷணஞ் செய்வோனென்பது பொருள். பிருகுவமிசத் துதித்த ஒருவேதியன்; நெடுங்காலந்தவஞ் செய்தவன். ஒருநாள் தர்ப்பை கொய்கையில் அதனாற் கையறுந்து உதிரமொழுக, சந்தோஷித்துக் கூத்தாடினன். அப்பொழுது சிவபிரான் வேதிய வடிவோடு சென்று "தவமிக்க செய்தனனென்னத் தருக்குற்றனையா?" என, ஒன்றுமறியாமையின் அவன் கையைப் பற்றித் தொங்கிய விரலையகற்ற அதினின்று பாலொழுகிச் சிறிது நேரத்தில விபூதி யொழுகியது. அதுகண்ட பர்ணாதன் சாஷ்டாங்கமாகப் பணிந்து நீயாரென வினவ, சிவபிரான் காட்சிதந்து பேருவாசமும் கணாதிபதித்துவமுங் கொடுக்கப்பெற்றவன். [சைவபு]

பர்த்ருஹரி—ஒரு ஸம்ஸ்கிருதகவி. விக்கிரமார்க்கனுக்குத் தமயன். [சந்திரசருமனிற்காண்க] இவன் உஜ்ஜயினிநகரத்தை முன்னர் அரசாண்டவன். சுபாஷிதரத்நாவளி யெனும் மஹாகிரந்தமும், பதஞ்சலி மஹாபாஷிய வியாகரண ரூபமான காரிகைகளும், வாக்யப்ரதீபமெனும் வியாகரணமும், இருபத்திரண்டு ஸ்லோகங்களையுடைய நாடகாவியமும் இயற்றியவன்; இளமை முதல் தவசிகள் யோகிகள் முதலானோரிடத்திற் பெரும் பக்தி வாய்ந்தவன்; இவ்வகைய நற்குணங்களுடன் அரசுசெய்து வருகையில், அந்நகரத்தில் ஸகல மந்திர சாஸ்திரங்களிலும் வல்ல வைதிக பிராமணனொருவன் புவனேசுவரியை நெடுநாளாக உபாசித்து வருகையில், அவ்வம்மை பிரசன்னமாகி ஒருகனியைத்தந்து "இதனையுண்போர் ஜராமரணங்களின்றி ஜீவித்திருப்பர்." எனக் கூறி மறைந்தருள, அவ்வேதியன் "நானோமிக்க தரித்திரன். இதனையுண்டு நெடுங்காலம் ஜீவித்து எவனைக் காக்கப்போகிறேன். காலமெல்லாம் பிக்ஷையெடுத்து ஜீவிக்க வேண்டியவன் தானே. ஆனதால் இதனை நம்மரசனுக்குக் கொடுப்பேன். அவன்புசித்து வெகுகாலம் பிரஜைகளை யிரக்ஷிக்கட்டும்" என்று கருதி, அரசனுடைய அவைக்களம் புகுந்து அக்கனியை மன்னன் கையிலளித்து அதன் மகிமையையும் வாயவிண்டனன்.

பர்த்ருஹரி அக்கனியை வாங்கித், தன் பிரியையான அநங்கசேனை யெனுந் தாசிக்களிப்ப, அவள் தனக்குப்பிரியனான குதிரைக்காரனொருவனுக்குக் கொடுக்க, அவன் தன் மனதிற்கு விரும்பிய ஒரு தாசிக்கும், அத்தாசி தன் இஷ்டனான ஓரிடையனுக்கும், அவ்விடையன் தன்னிடத்து அதிமோகம் வைத்த சாணமெடுத்துப் பிழைக்கும் ஓரிடைச்சிக்கும் கொடுத்தனர். அவ்விடைச்சி அக்கனியைப் பெற்றுக்கொண்டு கூடைநிரம்பச் சாணமெடுத்து வைத்து அதன்மேல் அவ்வரும் பெறற் கனியின் மகிமையுணராது வைத்துக்கொண்டு மன்னன் மாளிகை வழியேவர, பர்த்ருஹரி உல்லாசமாக வெளியேயிருந்து அக்கனியைக்கண்டு தான் அநங்கசேனைக்

குக் கொடுத்தது இவனுக்கெப்படி கிடைத்ததெனக் கருதி அவளை வருவித்து இக்கனி உனக்கேது என வினவி விருத்தாந்த முழுது முணர்ந்து, ஸ்திரீகள் எவ்வளவு அன்பு கொண்டிருப்பினும் நம்பத் தக்கவர்களல்லர், என நிச்சயித்து, சமுசார விரக்தனாய், அப்பழத்தை விக்கிரமார்க்கனுக்குக் கொடுத்து விட்டு தான் வனமடைந்து தவஞ் செய்துகொண்டு தன் வைராக்கியம் உறுதிப்படும்படி நீதி சதகம் சிருங்கார சதகம் வைராக்கிய சதகமெனும் மூன்று சதகங்களையுடைய சுபாஷித ரத்னாவளியைச் செய்தனன். அந்நூல் இவன் பேராலேயே பர்த்துருஹரி யென்று வழங்குகிறது. விக்கிரமார்க்கன் தானை பெற்ற கனியை ஒருவிருத்த[illegible]யன் யாசித்தமையால் அவனுக்குக் கொடுத்து உபயோகிக்கச் செய்தனன்.

பர்மியாசுவன்—[illegible]ருமரபினன்; அஜமீடன் புத்திரன்.

பர்பந்ததேசங்கள்—ஆரியா வர்த்தத்திற்கு அயலிலுள்ள ம்லேச்ச துருக்க தேசங்கட்கு வழங்குங் குறிப்புப்பெயர்

பர்வதராஜகுமாரி— (1) உமாதேவி. (2) திருவணிபள்ளயிலே பார்வதி தேவிக்கு வழங்குந் திருநாமம்.

பர்வதராஜன்—(1) இமயமன்னன் (2) இமயகிரி.

பர்வதன்—நாரதனுடைய சகோதரி புத்திரன். இவனும் நாரதனும் உலக முழுவதுஞ் சஞ்சரித்துக் கொண்டு வருகையில், ஸ்ருஞ்ஜயன் எனுமன்னனிடஞ் சென்று, அவன் விருப்பின்படி அங்கே சிறிதுகாலம் வசித்து, அவ்வரசன் மகள் ஸுகுமாரியெனுங் கன்னியாற் பல பணிவிடைகளுஞ் செய்யப் பெற்றிருந்தனர்.

பர்ஹிணசுவன்—இக்ஷ்வாகு மரபினன் அபிதாசுவன் கிருசாசுவன் இவர்கள் பிதா.

பர்ஹிஷதா—பிதுரரில் ஒரு சாரார்.

பர்ஹிஷதன்—பிராசீன பர்ஹியின் நாமாந்தரம்.

பர்ஹிஷ்மதி— விசுவ கர்மனுடைய மகள்; பிரியவிரதனுடைய மனைவி.

பலசூதனன்—இந்திரன் [பலாசுரனை மாயையாற் கொன்றவன்.] இப்பெயர் வலசூதனனென்றும் வழங்கும். வலாசுரனிற்காண்க.

பலந்தனன்—நாபாகன் புத்திரன்: இவன் அலந்தனென்றுஞ் சொல்லப்படுவன். இவன்மகன் வசுசிரப்பிரீதி; சூரியமரபினன்.

பலதேவன் } பலராமன் } பலபத்திரன் } ஆதிசேஷன் அம்சமாக வசுதேவனுக்கும் ரோகிணிக்கும் பிறந்தவன் திருமாலின் எட்டாம் அவதாரம் இவன் முதலில் தேவகி கர்ப்பத்தையடைந்து, யோகமாயையால் அவள் கர்ப்பத்திலிருந்து சங்கர்ஷிக்கையில் ரோகிணி கர்ப்பத்தையடைந்து, பின்னர் அவதரித்தான். ஆனதுபற்றி இவன் சங்கர்ஷணனெனப்பட்டான். பூனைத்துவசன்; நீலாம்பரன்; ஹலாயுதன் [ஹலம் =கலப்பை]; இவன் மனைவி ரைவதராஜன் மகளாகிய ரேவதி. இவன்கண்ணனுக்கு மூத்தோன். தேனுகாசுரன் பிரலம்பன் முதலானோரைக் கொன்றவன்.